7

# PERINBAKADAL

## பேரின்பக்காதல்.




இது

தஞ்சாவூர் சுவிசேட கவிராய

**வேதநாயக சாஸ்திரியாரவர்கள்**

இயற்றியது.

---

குமாரன்

**V. D. எலியா சாஸ்திரியாரால்**

அச்சிடப்பட்டது.

**Second Edition - 1911.**



**TANJORE:**

G. S. Maniya & Co.

விலை] [அணா 8.

# PERINBAKADAL.

*This is divided into Four Parts.*

**1. Gnana Tarattu.**
**2. Tiruchabai Tarattu.**
**3. Perinbakadal.**
**4. Pralaba Oppari.**

1. *Tim.* 1. 15.

This is a faithful saying and worthy of all acceptation, that Christ Jesus came into the world to save sinners.

*Isaiah.* 53. 4.

Surely he hath borne our griefs and carried our sorrows.

Composed by

**Vedanayaga Shastriar**

THE EVANGELICAL POET.

Tanjore. A. D. 1813.

Printed by his son

**V. D. Elijah Shastriar.**



Tanjore:
G. S. MANIYA & Co.

1911.

# பேரின்பக் காதல்.



சதுர்ப் பாகமானது.

க. ஞானத்தாராட்டு.
உ. திருச்சபைத் தாராட்டு.
ங. பேரின்பக் காதல்.
ச. பிரலாப ஒப்பாரி.

க. தீமோ. க : கரு.

பாவிகளை இரட்சிக்கக் கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தாரெ
ன்கிறது உண்மையும் எல்லா அங்கீகரிப்புக்குப்
பாத்திரமுமான வார்த்தை.

ஏசா. ருங : ச.

மெய்யாகவே அவர் நம்முடைய பலவீனங்களை எடுத்துக்
கொண்டு நம்முடைய நோவுகளைச் சுமந்தார்.

---

கிறிஸ்தாப்தம் ௲அகங ௵
தஞ்சைமா நகரில்
திருநெல்வேலிச் சுவிசேட கவிராய
வேதநாயக சாஸ்திரியார் செய்தது.
குமாரன்
V. D. எலியா சாஸ்திரியாரால்
அச்சிடப்பட்டது.

G. S. Maniya & Co.
1911.



VENERABLE

VEDANAYAGA SHASTRIAR,

*EVANGELICAL POET, TANJORE.*

**BORN THE 7 SEPTEMBER 1774 IN TINNEVELLY,**

**DIED THE 24 JANUARY 1864 AT TANJORE.**

SRI VANI VILAS PRESS, SRIRANGAM.

# PERINBAKADAL.

## PREFACE.

This Book which contains contemplations on the nativity and sufferings of Christ, consists of Four little Books called ஞானத்தாராட்டு (Gnanatarattu) திருச்சபைத் தாராட்டு (Tiruchabaitarattu) பேரின்பக்காதல் (Perinbakadal) and பிரலாப ஒப்பாரி Pralaba Oppari.)

1st Gnanatarattu, on Christ. This treats on the nativity of Christ and the benefits procured thereby.)

And this will assist Christians in their devotion by singing it in various tunes on Christmas both in their houses and Churches.

2nd Tiruchabaitarattu, on children. This will help, to contemplate the poverty of the Son of God at his birth, and the innumerable blessings, the Children of men enjoy from their very infancy.

As it becomes not Christians to sing the above mentioned songs on Christ or to use irreligious and foolish songs as the heathens do, when they put their Children to sleep, it was therefore found necessary to compose the above Tiruchabaitarattu in 60 Couplets.

3rd Perinbakadal. This book following the order of the Church Catechism, shews the system of Religion and the Passion of Christ and also the merits derived from thence,

There is another Perinbakadal which was composed formerly by an auther named Antonicuttee Annaviar

which, although a good work to excite the heart to devotion does not fully and regularly explain the sufferings of Christ. On this account and for some other reasons, it appeared necessary to compose this new work.

4th Pralapa Oppari on the death of Christ is a work similar to the Perinbakadal·

There is no doubt that this may prove beneficial not only to the Christian Children by its being a branch of learning for their improvement but also very edifying to those who are to approach the Table of the Holy Communion, for what can yield better comfort to a sinner than the atonement of Christ ?

It may also be divided into parts, and sung in various tunes atDivine Service duriug the seven weeks of Lent.

Those who wish to explain the Scriptures in public or to make ஞானச்சதுர் (Gnanachadur) i, e the act of preaching the word of God to a concourse of people assempled at an appointed place in the days of Lent, may explain this Perinbakadal which has been the method adopted by the Author himself.

For the various reasons above specified, Vedanayaga Shastriar, the Evengelical Poet, completed in the year 1813 these three Tracts in connection with each other called Gnanatarattu, Tiruchabaitarattu and Perinbakadal, and subjoined to them a Book called Pralaba Opparisung as a contemplation for the fasting days observed for 1834 in the hope that they will be very useful to all Chris, tians and their Children.

---

# பேரின்பக் காதல்.



## முகவுரை.

கிறிஸ்துவின் பிறப்பையும் அவர் பாடுகளையும் தியானிக்கிறதற்கு உதவியாய்ச் செய்த இப்புஸ்தகத்தில் ஞானத்தாராட்டு, திருச்சபைத்தாராட்டு, பேரின்பக்காதல், பிரலாப ஒப்பாரி என்ற நான்கு சிறு புஸ்தகக்கள் அடங்கி யிருக்கின்றன.

க. ஞானத்தாராட்டு கிறிஸ்துவின்பேரிலே. இது கிறிஸ்துவின் பிறப்பையும் அதினாலுண்டான பலன்களையுங் காட்டும்.

கிறிஸ்தவர்கள் தங்கள் ஆண்டவர் பிறப்பின் பண்டிகைகளிலே அவைகளைத் தேவாலயத்திலும் தங்கள் வீடுகளிலும் பலவித ராகங்களாய்ப் பாடித் தங்களை எழுப்பிக்கொள்ள உதவியாயிருக்கும்.

உ. திருச்சபைத்தாராட்டு குழந்தைகள் பேரிலே இதிலே தேவகுமாரனுடைய பிறப்பிலிருந்த மகா தரித்திரத்தையும் மனுஷ ஜாதியினுடைய குழந்தைகளுக்கு இருக்கிற அநேகஞ் சலக்கரணைகளையும் விரித்து காட்டி இரட்சகருடைய பிறப்பை தியானிக்க எத்தனஞ்செய்தது.

கிறிஸ்தவர்கள் தங்கள் பிள்ளைகள் நித்திரை செய்யப் பாடுகிறபோது மேலாகச் சொல்லப்பட்ட கிறிஸ்துவின் தாராட்டைப்பாடுகிறது மரியாதையன்று ஆகிலும் அந்தப்பிள்ளைகள் தூங்குகிறதற்கு வீணான பாடல்களை அங்கங்கே அஞ்ஞானிகள் தண்டக்கத்தின்படி பாடிவருகிறார்கள். அப்படி நம்முடையவர்கள் செய்கிறதழகல்ல.

ஆனதினால் அறுபது கண்ணியில் திருச்சபைத்தாராட்டென்கிற ஒரு பாடலை உண்டுபண்ண வேண்டியதாயிற்று.

ந. பேரின்பக்காதல் இரட்சிப்பின் ஒழுங்காய் வேதத்தின் அடக்கத்தையுங் கிறிஸ்துவின் பாடுகளையும் அதினால் உண்டான பலன்களையும் பாடினது.

முன்னாளிலிருந்த அந்தோனிக்குட்டி அண்ணாவியாரால் சுருக்கமாய்ச் செய்யப்பட்ட ஒரு பேரின்பக் காதல் உண்டு. அது எழுப்புதலைக் கொடுக்கிற பாடலாயிருந்தாலும், அது கிறிஸ்துவினுவிடத்துப் பாடுகளையுஞ் சரித்திரவரிசையாய் விவரித்துக் காட்டியிராததினாலும் பின்னுஞ்சில முகாந்தரங்களைப்பற்றியும் இந்த நூதனமான பேரின்பக்காதலை உண்டுபண்ண வேண்டியதாயிற்று.

௩. பிரலாப ஒப்பாரி கிறிஸ்துவின் மரணத்தின்பேரிலே பேரின்பக்காதலுக்கு ஒப்பானது.

இப்புஸ்தகஞ் சகல கிறிஸ்தமான பிள்ளைகளுக்கு அறிவைத்தருகிற பாடலாயிருக்கிறதுமன்றி, நற்கருணைக்குச்சேருகிற பக்தியுள்ள ஆத்துமாக்களுக்குச் சொல்லி முடியாத எழுப்புதலைக் கொடுக்குமென்கிறதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் இரட்சகருடைய பாடுகளைத்தவிர பாவிகளான மனுஷஜாதிக்கு அதிக ஆறுதலானதேதிருக்கலாம்.

கிறிஸ்துவின் பாடுகளை தியானிக்கிற ஏழுகிழமைகளிலேயும் இவைகளைப் பங்கு பங்காய் எடுத்து அந்தந்த இடங்களில் வெவ்வேறே ராகங்களை ஸ்தாபித்து தேவாலயத்திலே பாடலாம்.

பின்னையும் அந்த நாளிலே வெளியரங்கத்திலே வேதத்தைப் பிரசங்கிக்க அல்லது ஞானப்பாடல்களின் சதுர்ச் செய்ய மனதானவர்கள் விசேஷமாக இந்தப் பேரின்பக்காதலைக்கையாடி அதின்பேரில் வியாக்கியானம் பண்ணலாம். அப்படி இந்நூலை உண்டுபண்ணினவருஞ் செய்தார்.

இப்பால் முகாந்தரங்களைப் பற்றிச் சுவிசேட கவிராய வேதநாயக சாஸ்திரியார் ௲அ௱கரு௵ இந்த ஞானத்தாராட்டு, திருச்சபைத்தாராட்டு, பேரின்பக்காதலென்ற மூன்று சிறு புஸ்தகங்களையும் ஒன்றுபடுத்தி ௲அ௱௩௰௫௵ ஆசரிக்கப்பட்ட உபவாச நாளின் தியானிப்பாகப் பிரலாப ஒப்பாரி என்ற பாடலை உண்டுபண்ணி அத்தோடே சேர்த்துச் சகல கிறிஸ்தமான சபைக்கும் அவர்கள் பிள்ளைகளுக்கும் பிரயோசனமாயிருக்குமென்கிற நம்பிக்கையோடே முடித்தார்.



## க. ஞானத்தாராட்டுத் தலைவரிசை

## அட்டவணை





## உ. திருச்சபை தாராட்டு தலைவரிசை

## அட்டவணை.

## ௩. பேரின்பக்காதல் தலைவரிசை அட்டவணை.

## ௪. பிரலாப ஒப்பாரித் தலைவரிசை அட்டவணை.





# ஞானத்தாராட்டு.

## காப்பு.

திருக்கருணைப் பிரானர்
திருவுளத்து லகைமீட்க
அருட்கனி மரிபானின்றிங்
கவதரித் துதையமான
வுருக்கமெய்க் கிறிஸ்துவுக்கோ
ருனத ஞானத்தாராட்டுப்
பெருக்கவிஸ்பீரித்துச் சாங்தெம்
பிதாச்சு தனருபி காப்பாம்.

## க. கடவுள் வாழ்த்து.

க. சீராருந் தேவ
திருச்சுதன்மேற் செப்புகின்ற
நேராருந் தாராட்டை
நித்தியனே கேட்டருள்வாய்.

உ. வானத்தாராட்டு
மகிமைதனக் கொப்பெனவே
ஞானத்தாராட்டேசு
நாயகன் மேலியான்படிக்க.

ங. முந்தும் நரர்செய்த
முழுவினையு மாற்றுதற்காய்
வந்தவன்மேல் வந்திறங்கும்
வல்லபமே முன்னடவாய்.

ச. தேசுவளர் நாட்டுத்
திருச்சபையின் கொண்டாட்டு
ஏசுவின் றூராட்டுக்
கிரறுபதன் பருக்கு.

ரு. வரிசித்த மெஞ்ஞான
வாருதியே தேவ
பரிசுத்த ரூபிப்
பராபரனே முன்னடவாய்.

சு. போராட்டங் கொண்டு
பொரும்பேய்பட ஞானத்
தாராட்ட தொன்று
தயாபரன் மேலியான் படிக்க.

எ. வாக்குமனதுக் கடங்கா
வல்ல பரிசுத்தாவி
நாக்கினி ல்வந்திருந்து
நல்வாக்குத்தந்தருள்வார்.

## உ. தசாங்கம்.

அ. சீனாயி மாமலையான்
திவ்விய யோர்தானதியான்
கானானுதேயன்
கனநசரை யம்பதிமேல்.

கூ. வேசரி வாரணத்தான்
விண்மேகவெண் பரியான்
றேசுசிலுவைக் கொடியான்
றேர்ந்த ஜெபமாலையன்மேல்.

கo. தூதர்களி னேழ்முரசான்
றெல்லுலகும் வானுலகும்
பாதலமும் போற்றிப்
பணியுஞ் செங்கோற்பதிமேல்.

கக. அண்ணலின் மேலென்னை யிரட்சித்
தாண்டவன் மேல்மாவுருக்கக்
கண்ணனின் மேலென்றன்
கவலையெல்லாந் தீர்த்தவன்மேல்.

கஉ. ஏசுக்கிறிஸ்துவின் மே
லேக சக்கராதிபதி
நேசக்கிருபை
நிரந்தரன்மே னின்மலன்மேல்.

## ௩. அவையடக்கம்.

கங. செப்புகின்ற தாராட்டைத்
தேவ திருச்சபையோர்
தப்பிதமென் றெண்ணுமற்
சார்ந்தபிழை பொறுப்பார்.

கச. கிள்ளை குளறுமொழி
கேட்டுமகிழ்வார் பெரியோ
ருள்ளபடி யென்ற
னுரைகேட்டுள மகிழ்வார்.

## ௪. தாராட்டு

ராராரோ ராரரர
ராராதி பாலகனே
ராராரோ ராரேசு
நாயகனே ராராரோ.

கரு. காவில் விலகுங்
கனியி னலேவிளைந்த்
பாவவினை தீர்க்கவந்த
பாலகனே கண்வளராய்.

கசு. திருந்தி வினை தீர்க்கத்
தேடியுனையாரும்
வருந்தியழைக்காமல் வந்த
மாதவமே கண்வளராய்.

கஎ. மாசற்ற ஞான
மனுவே மனுவேலே
தேசுற்ற யூதர்குலச்
சீர்வேந்தே நித்திரை செய்.

கஅ. தோற்றும் நரக
சுவாலையில் வீழ்காம னரர்க்
காற்றுதல் சொல்லவந்த
ஐயனே நித்திரை செய்

ககூ. தேவகோபஞ் சாபந்
தீர்வை நரகஞ்சாவு
பாவமெலாமாற்றவந்த
பாத்திபனே கண்ணுறங்காய்.

## ரு. கிறிஸ்துவின் தாழ்மை

உ0. சீமானே வானுலகச்
செல்வமே யூதர்களின்
கோமானே மாடடையுங்
கொட்டிலோ வுங்கள்பதி.

உக. கட்டிலுனக்கு மகா
கஸ்தியோ தூங்குமஞ்சத்
தொட்டிலிலும் புல்லுச்
சுகமோ சுயாதிபனே.

உஉ. ஆனைபடைதேர் தளங்க
ளான ரததுரகச்
சேனைகளெல்லா மண்
செருக்கோவிண் சீமானே.

உங. மேலுனக்கு நொந்ததுவோ
மிக்ககுளிர் மேவினதோ
பாலுனக்கு மெத்தப்
பசித்ததுவோ பாத்திபனே.

உச. கேராபீ னெங்கே
கிருபாசனங் களெங்கே
சேராபீமெங்கே யுன்
செல்வமெங்கே தேயமெங்கே.

உரு. வல்லமை யெங்கே
மகத்துவ மெங்கேயுன்
றுல்லிப மெங்கே
சுரூபமெங்கே தூயவனே.

உசு. வானவரெங்கே மோட்ச
வாசிகளெங்கே யுனைக்கொண்
டானவரெங்கே நீதா
ரூருமிலாப் பாலகனே.

உஎ. பரதேசிலுள்ள பல
பாக்கியத்தை விட்டுப்
பரதேசிபோல வரப்
பட்சமுமக் குண்டாச்சோ

உஅ. வானபரன் றேவ
மகத்துவமெலா மறைத்தே
யீனநரரூப
மெடுக்கவோ விங்குவந்தாய்.

உகூ. சுத்தவதி தேவ
சுபாவத்தின் மேன்மையென்று
சத்துருக்களாம் நரர்
சுபாவத்தைச் சார்ந்தனையோ.

௩0 சம்மனசோர் சூழுஞ்
சதுர்விட்டுலகில் வந்தா
லம்மாத்திர மகிமை
யற்பவுலகந் தருமோ.

௩௧. பரமண்டலாதி
பதியேயதிலும்
தரைமண்டலத்தின் மகா
சங்கையென்று வந்தனையோ

௩௨. அன்னையெளிய கன்னி
யாஸ்திரியாச்சே யுனக்கிங்
கென்னவிதத் தாலுயர்ந்த
ஏற்றகலை போர்த்துவர்கள்.

௩௩. சொல்லுமெத்தைக் கேட்ட
துரோகிகட்காய் வந்ததினாற்
புல்லுமெத்தை யல்லாது
பொன்னுமெத்தை யர்கொடுப்பார்.

## ௬. பிறப்பின் பலன்.

௩௪. வானவர சாதிபதி
மண்மீதிங்கேகிடப்ப
தீனநரருன்னிடத்தங்
கேகியிருக்க வென்றோ.

௩௫. உன்னதத்தின் மேலா
யுயர்த்தியெமை வைப்பதற்கா
யிந்நிலத்தின் முன்னணையி
லே கிடத்தப்பட்டனையோ.

௩௬. பாக்கியத்தைத் தேவ
பவுசை யிழந்தவென
தாக்கினையே நீக்கி
யருமைசெய்ய வந்தனையோ.

௩௭. விந்தை விந்தையான பல
வெண்கலை யெங்கட்கருளக்
கந்தைத் துணியுனக்குக்
கைகண்ட நற்பலனோ.

௩அ. வானவனுக்கே மகிமை
மண்ணிற் சமாதான
மீனநரர்மேற் பிரிய
மெய்தவந்த பாலகனே.

௩௯. வங்கண மோடங்கலகை
மங்கையரிணங்க விடு
பங்கமற விங்கிருப
தங்கடர வந்தவனே.

## எ. தேவலட்சண மாறுதல்.

௪0. கற்பனை பத்தும் வேருய்க்
கட்டுதசலட்சணமும்
விற்பனமாய் மாறியொரு
வேற்றுருவ மானனையோ.

௪௧. இறப்பும் பிறப்புமிலா
னென்றவுன் மேன்மைக்கிங்
கிறப்பும் பிறப்புமுளா
னென்றிகழ வெய்தனையோ.

௪௨. என்றுமொரு கண்டசீ
ராயிருப்போ மென்றதைவிட்
டின்றுனைத்தான் கண்டவர்க
ளென்ன சொல்லமாட்டார்கள்.

௪௩. மாருத வஸ்துவும்நீ
மாறின தின்னன்பிரக்க
வீருலே வந்து
விளைந்த வினோதமிதோ.

௪௪. சருவபொருட்கும் வல்ல
சாமியென் ருற்பின்னால்
மறுகவிந்தக் கொட்டிலிலோர்
வல்லமையுங் காணோமே.

சரு. எங்கும் நிறைந்திருப்போ
னென்றால் முச்சாஸ்திரிமார்
திங்கட்டி சைபினின்று
தேடிவரக் காரியமேன்.

சசு. எல்லாத்தையுந் தெரிந்தோ
னேயானலெங்கள் குறை
யெல்லாத்தையுந் தெரியா
னென்றுப்போ னின்றதெனே.

சஎ. பரிசுத்தவானீதான்
பாவிகளை மெத்தக்
கரிசித்தாலத்தாற்
கணிசமுனக் குண்டாமோ.

சஅ. நீதியுள்ளோனேயானு
னிஷ்டூரப் பாவிகளை
வேதனை செய்யாமல்
மீட்கவருவாயோ.

சகூ. ஞானவானுமாகில்
யாவுமதிசயிக்க
ஈனக்குடிலினுற்ற
தெவ்வூர்ப் புதுஞானம்.

ருo. சத்திய வாசகனீ
சாவுகனிதின்ற பொல்லாச்
சத்துருக்கள் சாகாமற்
றற்காத்த தெந்தவிதம்.

ருக. அளவிலா நன்மையுளோ
னச்சே யுனக்கோ
ரளவுப் பிரமாண
மானதென்ன வாச்சரியம்.

ருஉ. பத்திலட்சணத் தினையும்
பட்சமிரக்கமென்றே
யுத்தவொரு லட்சணத்துக்
குள்ளடக்கிக் கொண்டனையோ.

## அ. புகழ்ச்சி.

ருந. பட்சமிரக்கத் தானே.
பட்சவுருக்கத்தானே
பட்சதாபத்தானே
பட்சமாய் வந்தானே.

ருச. இரக்கத் தொளிவோ
விரக்கத்துருவோ
இரக்கப் பெருக்கத்தி
னேராள வெள்ளமதோ.

ருரு. கிருபாசனப் பரம
கீர்த்திப் பிரதாப
கிருபா சமுத்திரக்
கிருபைக் கதிபதியோ.

ருசா. கருணை கடாக்ஷக்
க்ருணையானந்தக்
கருணைம்பரப் பொருளோ
காட்சியோ காரணமோ.

ருஎ. இரக்கமாய் வந்தா
யிரக்கமாய்ச் சென்று
யிரக்கமாய் வானி
லிருந்தாயினம் வருவாய்.

ருஅ. சினேகத்தைக் காட்டிச்
சினேகத்தை நாட்டிச்
சினேகத்தைச் சூட்டிச்
சினேகிக்க வந்தவனே.

ருசுகூ. ஆரென்றுரைக்கலா
மப்பனே நின்மகிமைப்
பேரொன்றை விஸ்தரித்துப்
பேசுதற்கு நாவுளதோ.

சுO. பாவிகளிரக்ஷகனீ.
பாவிகளினுறுதனீ
பாவிகளுக்கான
பரமவடைக்கல நீ.

சுக. கெட்டோரின்ருதையுநீ
கெட்டோரினன்பனும் நீ
கெட்டோருக்கேற்ற
கிருபா சமுத்திரம் நீ.

சுஉ. நீயே யென்மோட்சம்
நிலையான வாழ்வுபல
னீயே யெனக்குயிராம்
நித்திய சீவனலோ.

சுங. என்னவிதமாக
வேற்றினும் நீசெய்ததயைக்
கன்னதெல்லாங் கூடி.
யணுவுக்கணுவாமோ.

## கூ. எரோதேயின் கொடுமை.

சுச. கட்டுமெட்டாய் வாழுங்
கடுமெரோதே மாட்டுக்
கொட்டிலிலுங் கூடக்
குடியிருக்க வொட்டானோ.

சுரு. தோட்டத்தை விட்டுத்
துரத்துண்டோர் செய்தபவ
மாட்டுக்குடிலிலுந் தான்
வந்திருக்க வொட்டாதோ.

௬௬. யூதர்களி ராஜாவென்
றேதிஞலச்சணமே
பாதகர் தானுன்னைப்
பழிசெய்ய மாட்டாரோ.

௬௭. சொந்த வினமென்று வந்த
சொற்கேட்ட யூதருனை
நிந்தனையாய் நினைந்தா
னிஷ்டூரம் வேறதுண்டோ.

௬௮. அழுத்த வொலியா
யழுதக்காற் சேயர்
கழுத்தையறுக்க வந்தோர்
கண்டுகொள்ள மாட்டாரோ.

௬௯. ஆட்டிடையர் தூதனைக்கண்
டஞ்சினர் சேவகரிம்
மாட்டிடையிலென்ன
மகிமையைக் கண்டஞ்சுவர்கள்.

௭௦. எல்லா மெரோதே
யிடஞ்சேர்ந்தார் காட்டிடைய
ரல்லாவிராவிருளி
லார்க்குவரச் சம்மதிக்கும்.

௭௧. எகிப்பத்துக் கோடவென்று
லெவ்வா றுன்றுதை
யெகிப்பத்தோரைக் கடவு
ளிட்டபழி கேளாரோ.

௭௨. இஸ்றுவேலுன்னை
யிகழ்ந்தா லெகிப்பத்தி
னசலாரோவுன்ற
னருமையறியப் போருர்.

எங. எகிப்பத்துக்குத் திரும்பா
யென்றிசைத்த நீயே
யெகிப்பத்துக்கேக விப்போ
தெண்ணினதிங்கென்ன செயல்.

எச அற்ப எரோதேக்கென்
றஞ்சி யெகிப்பத்தடைந்தாற்
சொற்ப வுலகமுனைத்
தூஷணித்துப் பேசாதோ.

எரு. வல்லமையிலானோ
மகிமையில்லையோ கொலைஞர்
கொல்லவந்தானீயவரைக்
கொல்லப் பெலனில்லையோ.

எசு. நோக்கிவான் றாதரந்நாள்
லோத்தூரார்கண் குருட
தாக்கினைப்போனீயு
மாக்கினைலொண்ணுதோ.

எஎ. தேடியேகொல்லவருஞ்
சேவகர்க்காய்நீ பயந்துங்
கோடினைற் பெத்லேக
முரார்தானென்ன சொல்வார்.

## கo. நிந்தாஸ்துதி அதாவது நிந்தை யில்லாத் துதி.

எஅ. சீனைமலையினினீ
செய்த பெருமைகளிங்
கானலோர் வேளை
யடம்வரு மென்றஞ்சினையோ

எகூ. மாடாடு சீனை
மலையடுத்தாற் சாவெனவே
யீடாயுரைத்த வுனக்
கேற்றதுவோ முன்னணைதான்.

௮0. எத்திசையும் பேரா
யெகிப்பத்தைச் சங்கரித்த
பத்துவிதச் சேவகரும்
பாழடைந்து போனாரோ.

௮௧. வீடுமுட்டிக் காட்டில்
மிருகத்திடத்தில் வந்தோ
மாடு முட்டுமென்று
மருகியழாய் மாதவமே.

௮௨. மக்களுடன் பாதலத்தோர்
வானவரெலாஞ் சிரிக்க
வெட்கமற்று நீயழுதால்
வேடிக்கை பார்க்காரோ.

௮௩. முன்னுமறியா
முகமறியாப் பேச்சறியா
அன்னிய தேசத்தில் வந்தா
லாருனக்கு நன்மைசெய்வார்.

௮௪. ஊருமிலான் பேருமிலா
னொன்றுமிலான் பந்துஜன
மாருமிலான் சேயுனக்கிங்
காருதவி செய்வார்கள்.

௮௫. பிணிகள் நன்றறியாப்
பித்தர்கள் மாபூதி
யணிகட்காய் வந்தா
லணியுன் பேராகாதோ.

௮௬. சாலையிலையே பறித்துத்
தைத்தணிந்தோர் தேயமதிற்
சீலையிலையென்று வந்தாற்
சீலையுனக் கெங்கருள்வார்.

அஎ. பெத்தலகே மூராணுற்
பிள்ளையுன் சத்தங்கேட்டுச்
சித்தம் வைத்திரண்டொருதர்
சேர்ந்துதவி செய்யாரோ.

அஅ. வேந்தனீயாகாசு
வேருக்குன் னெஸ்தர் தனே
யீய்ந்தோவிசறே
விடுக்கத்தை நீக்கிவைத்தாய்.

அகூ. சக்கரத்திலும் புவன
சக்கரத்திலுமடங்காய்
மிக்கவன்னே கைக்கடங்கி
மிஞ்சாமற் போனனேயோ

கூ0. பேசுமெழுத்தைந்தினிலும்
பின்னெழுத்தினுமடங்காய்.
ஏசுவெனு மீரெழுத்தி
லேயடங்கிப் போனனேயோ.

கூக. தேவனைத் தேவனென்று
செப்புவதே மேன்மையல்லாற்
றேவனை மாந்தனென்று
செப்புவது செம்மையதோ.

கூஉ. சிங்கமாயாடாய்ச்
செழுஞ் சீவத்தாருவாய்ப்
பங்கமா யென்றனுட
பாக்கியமுமானனேயோ.

கூஙு. சிஷ்டியோ அல்லதுநீ
சிஷ்டிகனோ செம்மறியின்
குட்டியோ மேய்க்குகின்ற
கோனோகுண நிதியே.

## ௧௧. கிறிஸ்துவினினத்தார்.

௬௪. தச்சனுனை வளர்த்த
தாதையோ வுன்றனுட
பிச்சளங்களெல்லாம்
பெருமாட்டிடையர்களோ.

௬௫. வெட்டுக்கிளியருந்தி
மெய்வனமெல்லா மலைந்தே
யொட்டகத்தோலுடுத்த
வோரிருடி யுன்றாதன்.

௬௬. பாவிகளாயக்காரர்
பாதகங்களே புரிந்து
தீவினைக்காளானோர்
சேர்ந்த சினேகிதரோ.

௬௭. தேசமதிலுன்றனுட
சீடர்களெலாங் கடலில்
வீசிவலைபோட்டு
மீன்பிடிக்குஞ் சாதிகளோ.

௬௮. ஆயக்காரனுனக்கன்
பானவனோ தோற்பதஞ்செய்
சாயக்காரன் வீட்டிற்
றங்கினனிஸ்தானிகனே.

## ௧௨ தியானம்.

௬௯. ஆண்டபொருணீ படைத்த
வாதத்தின் மக்கள்சிறை
மீண்டுகொளவோ நரரின்
வேஷத்தை மேற்போட்டாய்.

௭0. வஞ்சமனுவோருன்
வருகைத் தயவறிந்து
நெஞ்சமகிழ்ந்துன்னை
நினைந்துகொள்ளப்போமுரோ.

௩௪. தீயில் விழுந்தேள்
திடுக்கெனக்கொட்டும் பாவத்
தீயில் விழுந்தோரையென்ன
செய்கையினுற் றாக்கவந்தாய்.

௩௨. நிற்பந்தமும் பயமும்
நிந்தையுங் கேடும் நிறைந்து
சற்பந்தனை யடுத்த
சண்டாளர்க்கோ பிறந்தாய்.

௩௩. கட்டுண்டு பேயின்
கடுஞ் சிறைக்குட்பட்டவர்கள்
வெட்டுண்டுபோக
விரும்பினுலொண்ணுதோ.

௩௪. ஏதுகொடுத்தார் நரரென்
றிக்கோலங் கொண்டதல்லாற்
றீதுகொடுத்தோர்க்கருளச்
சீவனையுங் கொண்டுவந்தாய்.

௩௫. உன்னைப்போனுமாக
வுன்னினதுன்னூர்க் கிருபை
யென்னைப்போனீயான
தெவ்வூரிரக்கமிது.

௩௬. குப்பையுயர்ந்து நெடுங்
கோபுரங் கீழானதுபோ
லப்பனீதாழ்ந்திங்
கடியாருயர்ந்தனமோ.

௩௭. ஏதோ கடவு
ளெளிமையாய்க் கொட்டிலுக்குட்
பாதகா! புல்லிற்
படுத்திருப்பதைப் பாரேன்.

௱அ. நன்றியறியா மனமே
நாயகனார் முன்னனைக்குட்
சென்றங்கவரின்
சினேகத்தைக் காண்கிலையோ.

௱கூ. இவ்விதமாயத்தனுனை
யீடேற்ற வந்திருக்க
எவ்விதமாயின்னமுல
கிச்சைகளை யெண்ணிநிற்பாய்.

## கரு. பிரதிக்கினை.

கக0. இத்தனையன்பா
யிரங்கியெனை மீட்கவந்த
அத்தனே யுன்னை
யனவரதமும் பணிவேன்.

ககக. தேவரீர் சித்தமதைச்
செய்வேனேன் சீவனையு
மாவலையுமுன்னையன்றி
யாரிடத்தும் வைத்துவையேன்.

ககஉ. உன்னைப் புகழ்வே
னுனைப்பணிவேனுன்னை விட்டுப்
பின்னையொரு பொருளைப்
பேணிப் பிதற்றேன்யான்.

ககங. வாக்கினாற் கண்ணால்
மனத்தாலுள் வாஞ்சையினா
லாக்கினாலுன்றனை யென்
னாட்களிலெல்லாந் தொழுவேன்.

ககச. அனியாயமான வுல
கற்ப சுகத்துக்கா
யினிமேலுனக்கேறா
தேதினையும் யான்புரியேன்.

கககு. ஆற்றும நேசா
அருமை மணவாளா
வேற்றுமையா யுன்னை விட்டு
வேறுரிடத்திலுய்வேன்.

கககூ. பொன்னுலகை விட்டுப்
புவியிலெனைப்போற் பிறந்த
மன்னவனே நின்னை
மறந்திருக்கும் வாறதெங்கே.

ககஎ. பொல்லாத பாவியெனைப்
போக்கமனம் வாராம
லெல்லாமிலவசமா
யீந்தாயென்னையாவே.

## கச. மன்றாட்டு.

ககஅ. மண்ணைப் பொருளை
மனையாளை மற்றதொன்றை
யெண்ணியுனை யிகழா
தென்னையாட்கொண்டருளே.

ககக. கெட்டோரைத் தேடுங்
கிருபையே நீயெனைக்கை
விட்டாலென்னுஞ் சிறைபை
மீட்டாலலோ மேன்மை.

க௨0. ஐயனே யென்னைமுற்று
மாட்கொளுனக் கானதையே
செய்யவருட் கண்ணாற்
றிருவுளமே பார்த்தருள்வாய்.

க௨க. இத்தனைநாள் வீணா
யெனைக்கெடுத்த பாதகங்க
ளத்தனையும் நீக்கி
யடிமையைக் கைக்கொள்வாயே.

கஉஉ. என்னையல்லாற் பத்தருனக்
கெண்ணிறந்த கோடிகளுண்
டுன்னையல்லாலென்றனக்கிங்
கோருதவியார் பரனே.

கஉந. தூயபரிசுத்தாங்கத்
தூதர் புகழ்நீவேத
நாயகனின் பாடலையும்
நாட்டம் வைத்துக்கேட்டனையோ.

கஉச. சொல்வேத நீதத்
துரையேயுன் தாசனெனை
நல்வேத நாயகனாய்
நாட்டியாசீர்வதிப்பாய்.

கஉரு. நன்றாய்ச் சதாகால
நாளெல்லாம் வாழ்ந்துகளித்
தென்று மென்மேலன்பா
யிருந்தாள் பராபரனே.

## கரு. திருச்சபை வாழி.

கஉசு. வேந்தரறிஞர்
மிகக்கற்றோர் மெய்க்குருக்கள்
சாந்த சுவிசேடச்
சபையோரெலாம் வாழி.

கஉஎ. வாழி பராபரனின்
மைந்தன் மனுவேலரசன்
வாழியின்று மென்று
மறுமையிலும் வாழியதே.

முற்றும்.

# திருச்சபைத் தாராட்டு

## க. தேவபராமரிப்பு.

க. சீர்பூத்த தேவ
திருச்சபைத் தாராட்டுரைக்கப்
பார்பூத்த ஞானப்
பரமசுதன் காப்பாமே

உ. காப்பாற்ற வந்த
கருணை மனுவேலரசே
மூப்பான மெய்ச்சபையின்
முப்பொருளே முன்னடவாய்.

ங. முன்னடவாய் நாயேற்கு
மோசமொன்றும் வாராம
லன்னைமரி மகனே
ஆதிபிதாவின் சுதனே.

ச. ஆதிபிதாவானோ
ரருமை மகனைப் பார்த்து
மாதயவாய்த் தந்த
மதலையே நித்திரைசெய்.

ரு. நித்திரைசெய் சத்துருக்கள்
நின்னிடத்திற் சேராமற்
சித்தமிரங்கித்
திருக்கண்ணாற் பார்த்தருள்வார்.

சு. பார்ப்பாருனைத் தயவாய்ப்
பார்த்துனது துக்கமெல்லாந்
தீர்ப்பாருனக்குத
தினந்தினமு நன்மைசெய்வார்.

எ. நன்மைசெய்வார் தேற்றரவி
னல்லாவியைத் தருவார்
துன்மையெல்லா நீக்கிச்
சுகத்திலுனை யாதரிப்பார்.

அ. ஆதரிக்கக் கர்த்தருண்டு
அற்புதனாற் காவலுண்டு
வேதன் றுணையதுண்டு
வித்தகனார் தஞ்சமுண்டு

கூ. தஞ்சமுண்டு காவலுக்குச்
சம்மனசுண்டேசுவுட
ஐந்து காயத்தி
னடைக்கலமுண்டெந்நாளும்.

## உ. தேவனார் பிறப்பும் மனுடனார் சிறப்பும்.

க0. எந்நாளும் வாழ்ந்திருக்க
யேசுவுனக்காக
அந்நாளின் மாட்டகத்தி
லன்னை வயிற்றிற் பிறந்தார்.

கக. அன்னைமரி வயிற்றி
லாரிருள் சூழ்கானகத்தில்
முன்னணையிலே பிறந்தார்
மூடுதற்குச் சீலையற்று.

கஉ. சீலையுளாக்குண்டவர்க்குச்
சேர்த்த கந்தைமாத்திரந்தான்
மேலும் நல்லதொட்டிலுண்டு
மெத்தையுண்டு கட்டிலுண்டு.

கந. கட்டிலுண்டோ கர்த்தருக்குக்
காட்டிலென்ன வுண்டாகுங்
கொட்டிலுக்குள் மாடுதின்குங்
கூளமல்லால் வேறதுண்டோ.

கச. வேறெருத் தாதரவோ
மேய்ப்பர்களை யல்லாமற்
கூறுதற்கோ வுன்றனக்குக்
கூடமுண்டு வீடுமுண்டு.

கரு. கூடமுனக்குண்டவர்க்குக்
கொட்டிலுண்டு புல்லுமுண்டு
மாடுமுண்டு பின்னே
மடத்திலிடமுண்டாமோ.

கசு. உண்டா முனக்கோ
வுலகவெகுமானமெல்லாங்
கொண்டாடத் தந்துவிட்டார்
கோடிவிதச் சீராட்டும்.

கஎ. சீராட்டத் தாயருண்டு
சேர்ந்திருக்கத் தோழருண்டு
தாராட்டச் செல்வியுண்டு
சந்ததிகள் வீட்டிலுண்டு.

கஅ. வீட்டிலுனக்கு
வெகுபேருதவியுண்டு
காட்டிலெங்கள் கர்த்தருக்குக்
கைக்குதவியாரிருந்தார்.

ககூ. ஆரிருந்துங் காரியமே
னக்குடிலும் விட்டேகக்
கோர எரோதே
கொடுமைமிகச் செய்தானே.

உ0. கொடுமை செய்வாரில்லைக்
கொல்லுவாரில்லைக்
கடுமைசெய்வாரில்லைக்
கவலையற்று நித்திரைசெய்.

## ௩. பிள்ளைகள் வருணிப்பு.

உக. நித்திரைசெய் தெள்ளமிர்தே
நேசமுறும்பைங்கிளியே
சித்திரப் பூங்காவனத்திற்
சென்று வருங்கோகிலமே.

உஉ. கோகிலமே தாராவே
கூவும் புறாவினமே
பாகுதனிலே சமைந்த
பஞ்சாமுதத்தேனே.

உ௩. தேனே ரசமே
திகட்டாத செங்கரும்பே
மானே யென்கண்ணே
வயிரமணிப் பெட்டகமே

உ௪. பெட்டகமே பொற்பணியே
பேழையே யென்னுசைக்
கட்டழகே மாத்துயர்ந்த
கட்டித் திரவியமே.

உ௫. கட்டிமுத்தே சீவரத்தினக்
கண்ணே யெனதுயிரே
வட்டமிட்டாடு
மயிலே மயிற்பேடே.

உ௬. பேடே இளங்கொடியே
பிள்ளைக் கலிதீர்த்து
வீடேயுலாவி
விளையாடும் நல்லனமே.

உஎ. அன்னமே சோபனமே
யாதனமே மாதனமே
சொன்னமே மின்னே
துலங்கவரும் பாக்கியமே.

உஅ. பாக்கியமே கூத்தாடும்
பாவையே பங்கயமே
தீர்க்கமிகும் ஞான
தீபமே கண்வளராய்.

உகூ. கண்ணுறங்கு மின்னரசே
கர்த்தரிரக்கம் வைத்துப்
புண்ணியமாய்த் தந்தருளப்
பூத்துவளர் கற்பகமே.

## ச. கிறிஸ்து உண்டுபண்ணின நன்மை.

௩0. கற்பகமே நீதான்
கலங்கி யழவேண்டாம்
அற்புதனருன் மேலு
மன்புவைத்தாரந்நாளில்.

௩க. அந்நாளில் யூதர்க்
களித்தது போலிங்குனக்கு
மன்னாவைத் தந்தருள
வந்தார் பரமசுதன்.

௩உ. பரமசுதனும்
பராபரனுமானோர்
வரமனைத்து முண்டாக்க
வந்தாரே பாவிகட்காய்.

௩௩. பாவிகளுக்காகவென்றே
பாடுபட்ட புண்ணியனார்
சீவகனியுனக்குத்
தின்பதற்கு கொண்டுவந்தார்:

௩ச. கொண்டுவந்தாரெங்கள்
குலமானாராதி நரர்
பண்டுகனிதின்ற
பழவினையும் பொய்யாமோ.

௩௫. பொய்யான பேய்களுடன்
போர்செய்திளைத்தவர்க்கு
மெய்யான அப்பமவர்
மேன்மையுள்ள பானமவர்.

௩௬. மேன்மையுள்ள ராஜா
வினைதீர்க்கு மேசியா
மானமிகுந் தேவ
மனுவேல் தம்மாங்கிஷத்தை.

௩௭. மாங்கிஷத்தைப் போசனமாய்
மாற்றித் தமதுதிரம்
ஈங்குனக்குப் பானமதா
யீய்ந்தார் கிறிஸ்திறைவன்.

௩௮ கிறிஸ்து மனோவாக்காற்
கிரகிக்கக் கூடாத
திரித்துவத்திலொன்றாகச்
சேர்ந்திருக்கும் ஞானமவர்.

௩௯. ஞானப் பராபரனார்
நல்மனதா யுன்றனக்கு
வானத்தினப்பமென
மைந்தனையுந் தந்தாரே

௪0. மைந்தனுக்கா யாவும்
வகுத்தாருனைப் படைத்தா
ரிந்தவித நன்மைகளுக்
கென்னதா னொப்பாகும்.

௪௧. ஒப்பற்ற தேவ
னுனக்கிரங்கி வானாட்டின்
அப்பத்தைத் தந்தா
ரதிலுமினமென்ன செய்வார்.

௪௨. என்னென்ன வேண்டினதோ
வெல்லாமுனக் கிருக்கப்
பின்னையும்நீ கத்தியழப்
பேச்சுண்டோ கண்மணியே.

௪௩. கண்ணே யுனது
களையாறச் சீவனுட
தண்ணீர் குடிக்கத்
தருவார் பரமசுதன்.

௪௪. பரமசுதன் றேடிவைத்த
பாக்கிய மெல்லாந்
தருவார் நீகேட்டால்
தரமாட்டோ மென்பாரோ.

௪௫. மாட்டாரோ நின்கவலை
மாற்றுரோ நின்னைவிட்டுப்
போட்டாரோ புஸ்தகத்துன்
புள்ளியிராதே போமோ.

௪௬. புள்ளிபுள்ளியான பல
பொற்சரிகைப் பூப்போட்ட
வெள்ளை நிலையங்கி
விதவிதப் பட்டாடைகளும்.

௪௭. பட்டுப் பட்டாவளியும்
பன்னிரு முத்தாரமதுங்
கட்டு பன்னிரண்டு
கதிர்மின்னும் ரத்தினமும்.

௪௮. மின்னிய ஞானுபரண
மேன்மையுள்ள பெட்டகமும்
பொன்னின் முடியுமெங்கள்
புண்ணியனுர் கையிலுண்டு.

## ரு. பிள்ளைகளின் ஆறுதல்.

சகூ. கையிலொரு பிள்ளைதனைக்
கர்த்தரெடுத் தேந்திச்
செய்த தயவுனக்குஞ்
செய்யா திருப்பாரோ.

ருo. செய்வாராசீர்வாதஞ்
செய்வாரனுக்கிரகம்
பெய்வார் கிருபைப்
பெருக்கில் விளையாடாயோ

ருக. ஆடாடு சாஞ்சாடங்
காடிங்காடாஞ்சுகளோ
டாடாடுன் னேசுவுமோ
ராடவர்க்கு நீயாடு.

ருஉ. ஆட்டுக்காய்ச் சீவனைவிட்
டாட்டுக்காற் றுவீது
சூட்டுக்கோல் பற்றித்
துரத்திவிட்டார் துன்மனசை.

ருங. துன்மனசாம் பேய்கள் வந்து
சோதனைகள் செய்யாமற்
சம்மனசிலே சிலரைத்
தற்பாஞர் காவல்வைப்பார்.

ருச. காவலாய் நிற்பாரென்
கண்ணேநீ கண்ணுறங்கு
கூவியழுதேங்காதே
கோபமிகப் பூணுதே.

ருரு. பூண்டெழுந்த பேய்களுடன்
போர்செய்து வெற்றிகொண்ட
ஆண்டவஞர் காவலிங்குண்
டஞ்சாமனித் திரைசெய்.

## ௬. தேவதோத்திரம்.

௩௬. அஞ்சவரும் பாவிகளுக்
கஞ்சல் தருமைங்காயர்
கஞ்சமலர்ப் பாதங்
கனவிலேயும் யான் மறவேன்.

௩௭. கனவினினேவிற்
கருத்திற் கண்ணுக்குள்
மனதிலென்றன் வாக்கில்
மனுவேலைச் சிந்தைசெய்வேன்.

௩௮. சிந்தித் துருகித்
தியான ஜெபமாலையினுல்
வந்தித் தென்னேசுவுடன்
வாழ்ந்திருக்கச் செய்வேனே.

## ௭. திருச்சபை வாழி.

௩௯. செய்ய திருநெல்வேலித்
தேவசகாயனருள்
மெய்வேதநாயகன் சொல்
மிக்கசபைத் தாராட்டே.

௪௦. தாராட்டு வாழி
சபைவாழியச் சபையிற்
சீராட்டும் பாலர்
சிறந்திருக்க வாழியதே.

முற்றும்.



# பேரின்பக் காதல்.



## காப்பு.

திருவுரை மறுத்தமாந்தர்
தீதறச் சிலுவைமீது
குருதியனைத்துஞ் சிந்திக்
கொலைப்படச் சித்தமான
பெருமைசேரேசுவுக்கோர்
பேரின்பக்காதல் பாடக்
கருணையிஸ்பிரீத்துச் சாந்தெங்
கடவுடாடுணைக் கொள்வோமே.

## க. கடவுள் வாழ்த்து.

க. சீர்பூத்த மானிடனுந்
தேவனுமொன்றுயெழுந்த
பார்பூத்த யேசு
பராபரன் மேற் காதலுக்கு.

உ. சிந்தைதனில் வந்தெனக்குத்
தீர்க்கமிகும் வாக்குதவி
தந்தருளுமி ஸ்பிரீத்துச்
சாந்துவெனுங் கர்த்தாவே.

ங. வானத்தோர் பூதலத்தோர்
மற்றவருங் கொண்டாடும்
ஞானக் கிறிஸ்தேசு
நாயகன்மேற் காதலுக்கு.

௫. தேற்றரவே சீடர்
சிரத்திலன்று செஞ்சுடர்போ
லாற்றவரும் பரிசுத்
தாவியே முன்னடவாய்.

௬. மாசில்லாத் தேவனுக்கு
மைந்தருக்கு மைந்தனெனு
மேசியா விம்மானு
வேலிறைமேற் காதல்சொல.

௭. ஆய்ந்ததவ நூற்றிருப
தன்பர் புகழிஸ்பிரீத்துச் அப். 1: 14, 15,
சாந்து திருப்பாதஞ்
சதாகாலம்யான் மறவேன்.

௭. தேசுலவு மேலாந்
திரியேக வஸ்துவென்ற
பேசரிய கர்த்தனின்மேற்
பேரின்பக் காதல்சொல.

௮. ஆண்ட பரிசுத்த
வரூபியே யென்றனக்கு
நீண்டதமிழ் வாக்களித்து
நித்தநித்தங் காத்தருளே.

## உ. அவை யடக்கம்.

௯. பாடுபட்ட யேசு
பராபரன்மேற் காதலையா
னேடுகெற்ற நாவலர்முன்
னேற்றத் துணிந்ததுதான்.

௰. அன்றொரு பெண்பேதை
யறிவின்மிக்க சால்மோனை
வென்றுகொள்ளச் சொன்ன
விடுகதைக்கி தொப்பாகும்.

கக. சொல்லாகும் பாட்டாகுந்
தோத்திரிக்கும் நாவாகுங்
கல்லாகும் நெஞ்சக்
கசடனு னகாதே.

கஉ. இவ்வாறடியே
னிழுக்குடைய பாட்டிலொன்று
மொவ்வாதெனினு
முசிதமெனக் கொண்டருள்வார்.

கங. பிள்ளைகளன் ருேசியன்று
பேசினதற் கேசுபரன்
றள்ளிவிடக் கேட்ட
சாஸ்திரிகட்கென்ன சொன்னர்.

கச. அன்னதுபோலென் கவிதை
யாகாதெனினு மன்பாய்ப்
பன்னுதமிழ்ப் பாவலர்கள்
பக்கிஷமாய்க் கேட்பாரே.

## ங. தசாங்கம்.

கரு. போதந்தரும் புகழ்சேர்
பூருவமோசேக்கு முனம்
வேதந்தரும் பெருமை
மேவியசீனு மலையான்.

கசு. வல்லமறைப் பெட்டி
வரக்கண்டு பின்வாங்கி
நல்லயோவான் றீட்சை
நடத்திய யோர்தானதியான்.

கஎ. ஆறுருடம் நீரை
யரியமணப் பந்திலே
தேறுமதுவாக வருள்
செய்கலிலேயாத் தேயன்.

கஅ. பேரின்பச் செல்வப்
பெருக்கில்மிக வளர்ந்து
சீரின்பத் தாயர்பணி
செய்நசரை யம்பதியான்.

கக. மூவாள தொன்ருய்
முடிந்தெரு சலேக்கெழுந்த
மாவேசரியெனச் சொல்
வாய்மைமிகும் வாரணத்தான்.

உ0. பற்றுதலாய்ச் சீடரெல்லாம்
பார்க்கப் பிரஸ்தாபமுடன்
வெற்றிபெற வானிலெழு
மிக்கமேகப் பரியான்.

உக. அதிருமலகை
யனைத்துமடங்கிப்
பதறுஞ் சிலுவைப்
பசுமைப் பதாகையினுன்.

உஉ. வீருக மானிடரும்
விண்ணவரு மந்திசந்தி
மாறுமஃச்சரிக்கு
மந்தர ஜெபமாலிகையான்.

உங. தூயவெழுதாரை
தொனிக்க மரித்தோரை
மூய்விலெழும்ப
முழங்குங் கனமுரசான்.

உச. வானோர்கள் பூதலத்தோர்
வன்பாதலத்தோர் மற்
ருேரு மெவ்வுயிரு
மஞ்சல்செய்யு மாணையினுன்.

## ச. காதற்புகழ்ச்சி.

உரு. உலகமுழுது
மொரு குடைக்குளாண்ட
வலவன்றவிதரச
வங்கிஷ கிரீடாதிபதி. 1 நாளா. 18: 1. மி.

உசு. நேசத்திரித்துவத்தி
னித்திய மத்திஸ்தமுறை
யேசுக்கிறிஸ்தென்
றிசைந்த திருநாமன்.

உஎ. வீரப்பட்டந் தரித்த
மிக்ககுருவினதி எபி. 5: 6.
காரப்பட்டந் தரித்த
காவலபிஷேகன்.

உஅ. திக்கிலெழு ஜாதிகளைச்
சேரநிக்கிரகம் புரிந்து
மிக்கவிசறுவேலின்
மேனடத்துஞ் செங்கோலான். ஆதி. 15: 18.

உகூ. சங்கரிப்பினூற்றெண்பத்
தையாயிரஞ் சனத்தைச் 2 இரா. 18: 18.
சங்கரிக்குமோர் சம்
மனசுதரச் சேனையினன். சங். 60: 8 10.

௩0. பாரினாளும் வேந்தர்
பணிந்து கப்பங்கொண்டுவரு
மீர்ராறுவாசல் வைத்த
யேருசலேங் கோட்டையினன் சங். 72: 10.

௩க. ஆருந்திறவா
தடைத்தவனப் பாற்றிறந்தா
லாருமடைக்காம
லதிசயஞ்செய் வாசலினன். வெளி. 3: 7.

௩௨. கற்பதித்த ரத்தினக்
கபாடமின்னப் பொற்றகட்டின்
பொற்பிலங்குமுந்தமெல்லாம்
பூத்திலங்கும் வாசலினன்.

௩௩. சிங்காசனத்திற்
செழிக்குந் தவிதரசன்
சங்கீதம் பாடிக்கூத்
தாடிவரும் வாசலினன்.

௩௪. தூதர்களெக்காளத்
தொனிமுழங்கப் பன்னிருவர்
வேதமுழங்க
வெடிமுழங்கும் வாசலினன்.

௩௫. நாலு ஜீவன்கணின்றி
ராப்பகலு மோயாமற்
கோலமாய்ப் பாப்பாடிக்
கூவிநிற்கும் வாசலினன். அறி. 4: 6.

௩௬. தங்கண் மகுடங்க
டனைக்களைந் தப்பாற்போட்டு
மங்களங் கணுலாறு
மன்னவர்சொல் வாசலினன்.

௩௭. பன்னிருவர் வேதபா
ராயணங்கள் பண்ணமுன்னுட்
பன்னிரு பிதாக்கள்
பணிந்துதொழும் வாசலினன்.

௩௮. கேராபீன் போற்றக்
கிறிஸ்தவரெல்லா மகிழச்
சேராபீம் மேற்பவனி
சென்றுவருஞ் சீர்வேந்தன்.

## ரு. தேவலட்சணம்.

௩௯. தோற்றமுடிவற்ற
சுயம்பாயனாதியுமாய்
மாற்றமில்லாப் பேரொளிவாய்
வந்ததிருவுருவான்.

௪௦. ஆராயக்கூடாத
ஆழத்திருக் கருணைப்
பேராயுதவும்
பெருமைப்பெரும் புகழான்.

௪௧. எல்லா மறிந்திருப்போ
னெங்கும் நிறைந்திருப்போ
னல்லார் பொல்லார் கிரியை
யாவும் நடுத்தீர்ப்போன்.

௪௨. எல்லாவுயிர்க்கு
மிறையாயிறைவனுமா
யல்பாவா யோமேகா
வாயனைத்துங் காத்தளிப்போன்.

௪௩. எவ்வுயிர்க்கு மீச
னிரக்ஷகனி யேசுவென்ற
திவ்விய திருநாமத்
திரித்துவத் திரண்டாளான்.

௪௪. ஞானத்தளவில்லா
நன்மைவடிவானோன்
வானத்தமலர்
வணங்கிநிற்குமா வேந்தன்.

௪௫. காணக்கூடாதானோர்
கண்டிப்பதில்லாதான்
தோணக்கூடாத
சொரூபனரூபா ரூபன்.

சசு. சமஸ்த சகாய
சமஸ்தவுபாய
சமஸ்த குணால
தயாபசருவேசன்.

சஎ. ஒன்றுநிகரில்லாதா
னோர்பழுதுமில்லாதா
னென்றுமொரு கண்டசீ
ராயிருக்குமே காந்தன்.

சஅ. வாக்குக்கடங்கான்
மனத்தினுக்கு மெட்டாதா
னேக்குக்கு நோக்கானன்
னேக்குககு நோக்காவான்.

சகூ. முத்திவழி காட்டி
முதன்மைக் குருவடியாய்ச்
சத்திய வேதத்தைத்
தரவுதித்த தாஷ்டீகன்.

ருO. ஈரைந்திலட்சணத்தா
னீரைந்து கற்பனையா
னேரைந்து காயத்
துலகமுழுதும் புரப்போன்.

ருக. துன்மையென்பதில்லான்
றற்சிந்தையில்லானிந்தை யில்லா
னன்மையெல்லாமுள்ளா
னலமுள்ளான் ஞானமுள்ளான்.

ருஉ. தாய்தந்தையில்லான்
றமரில்லான்குரமில்லான்
பேய்தந்திரத்தரத்தைப்
பிட்டவுக்கிரமப் பெலத்தான்.

௫௩. எருத கண்டவெளிக்
கெட்டாப் புறத்தினிற்கு
மாருத திட்டவட்ட
மண்டலீகப் பெருமான்.

௫௪. ஆதத்தகத்தி
னதத்தையதமாக்கி
வேதத்திதத்தில்
விதத்தில் வைத்த விச்சேத்திரன்.

௫௫. சிற்றின்ப மாயவலைச்
சிற்றிடையாராசை கொண்டு
முற்றுந் திரிந்ததிரி
மூர்த்திகளுங் காணுதான்.

௫௬. ஆறுறு சக்கரத்து
மச்சரத்துந் தத்துவத்தும்
வேறேதுள சமய
வேடத்துமே வாதான்.

௫௭. அக்குமணி சங்குமணி
யாண்டிமணி தாதர்மணி
பொக்குமணி யல்லாற்
புகழ்மணி யென்றெண்ணுதான்.

௫௮. அவ்வுநவ்வுஞ் சவ்வுமதி
லையுங்கிலியுமென்றே
செவ்வையற்றக்கியானர்
செபிக்குஞ் செபங்கேளான்.

௫௯. பேச்சாற் பிதற்றல்களாற்
பேய்க்கூத்தால் வெண்சாம்பற்
பூச்சால் முழுக்கதனுற்
போற்றக் கிடையாதான்.

சூ௦. செம்பில் மரத்திற்
சிலையிலிருக்குதென்று
கும்பிட்டு நிற்குஞ்
சூருடரைக் கைக்கொள்ளாதான்.

சூக. வாயிற்றலையில்
மடியில் மனையைச் சுமந்த
பேயைக் கொண்டாடுகின்ற
பித்தர்களைக் கொண்டாடான்.

சூஉ. பொல்லாக்குணம் படையான்
புண்ணிய மெல்லாமுடையா
னெல்லாப் பொருளு
மிறைஞ்சி நிற்குமெண் குணத்தான்.

சூந. எல்லையில்லா மெஞ்ஞானத்
தின்பக்கடல் சருவ
வல்லமைக்கு மேலா
மகத்துவப் பிரகாசன்.

சூச. தேவாதிதேவன் மகா
திவ்விய பரிசுத்த வஸ்த
தேவாள் தினுங்கனியா
லிஸ்திரியின் வித்தானேன்.

## ரு. தாழ்ச்சி.

சூரு. எந்தை யிசருவே
லிறைவனெழுந்தொரு நா
ளந்தமிகும் பொற்சிலுவை
யாசனத்திலே யிருந்தான்.

சூசூ. வேதத்துரை குருசின்
மேலிருக்கும் நாட்பழைய
வாதத்தின் பிள்ளை
யரும்பாவியா னடியேன்.

௬௭. தேவாதி தேவனுக்கொப்
பாயிருக்கச் சிந்தைசெய்த
வேவாளின் பிள்ளையிறைக்
கேருத புத்திரனன்.

௬௮. நாலுவரமெல்லாம் போய்
நன்மையும்போய் ஞானமும்போய்
மேலுமலகைக்கு
மிகவடிமைப்பட்ட தொண்டன்.

௬௯. நன்றியற்றுச்செய்த
நடக்கையைக் கண்டச்சணமே
யொன்றுக்கு மாகானென்
றேற்றிவிடப்பட்டவிடன்.

௭0. தோட்டத்திலுள்ள
சுதந்தரமெல்லாம் பறித்துக்
காட்டிற்றுரத்திவிடக்
கண்கலக்கப் பட்டலைந்தோன்.

௭௧. நீதிக்குஞ் சாகா
நிலைமைக்குந் தூதர்களின்
சாதிக்குமப்புறத்தே
தள்ளுபட்ட சண்டாளன்.

௭௨. எல்லாச் சுதந்தரமு
மெல்லாப் பெருக்கமும் போய்ப்
பொல்லாதானென்று
புறக்கணிக்கப்பட்ட வம்பன்.

௭௩. தட்டுதலாகப் பேசித்
தந்தையைவிட்டுத் தூரப்
பட்டிடுக்கப்பட்ட வதிப்
பட்டலையப்பட் டமகன்.

எச. இட்டநலத்தோ
டிளமையெல்லாம் போக்கடித்த
கெட்டகுமாரக்
கிருத்திரமக்காலாந்திரன்.

எரு. காலாகாலத்திற்
கதிவழியைத் தோணும
ஞலாவிதத்திலேயும்
நன்மையற்ற மூடாற்றுமன்.

எசு. வஞ்சமனப் பேய்க்கு
மனதைமுழுதுங் கொடுத்திட்
டஞ்சலெனக் கும்பிட்
டலைந்தவறிவீனன்.

எஎ. சொற்பவுலகைச்
சுகமென்றகத்திலுன்னி
யற்பநினைவா
லலைக்கழிந்த வாங்காரன்.

எஅ. பாவத்துருவாகப்
பார்மீதிலே பிறந்து
தேவத்தைச் சற்றெனினுஞ்
சிந்தைசெய்யாத் தீபாவி.

எகூ. நற்புத்தி சொல்வாரை
நாடாமனுரியர்க
டுற்புத்தி கேட்டுச்
சுகங்கெட்ட துன்மார்க்கன்.

அ0. ஆனநாளெல்லா
மலகைக் காளாயலைந்து
மானமழிந்து
மதியழிந்தவன் பாவி.

அக. என்னபடித்தாலு
மேதேதைக் கேட்டாலு
மன்னபடி செய்யாத
வக்கிரமச் சிந்தையினன்.

அஉ. சாடிசொல்லுதற்குஞ்
சகல பிரளிகட்குங்
கோடி புலேக்குங்
கொலேக்குங் குருபீடம்.

அ௩. வாங்காமனீதி
மறைபகருமாதவரோ
டாங்காரம்பேசி யெதிர்த்
தாடிநிற்கும்மாகாத்தியன்.

அ௪. மோகமுற்ற பாவவிருண்
மூடியதினற் படித்த
வாகமத்தாலுள்ள
மடங்காத துர்சீலன்.

அ௫. சன்மார்க்க வேதத்
தவமில்லாச் சாந்தமில்லாத்
துன்மார்க்கப் பொல்லாத்
துடுக்கர் கட்கெல்லாந் தோழன்.

அ௬ மோகவெறியான் மயங்கி
மூதறிவெல்லாமழிந்த
தேகசுகபோக
சிற்றின்ப வுல்லாசன்.

அஎ. ஞானவறி வுணர்த்தல்
நல்லோர்கள் சங்காத்தந்
தானந்தவ முயற்சி
சற்குணங்களொன் றுமிலான்.

அஅ. பாவவழியிற்
பலகாலமுந் திரிந்து
சீவனுக்கு முத்திவழி
தேடாத சீர்கேடன்.

அகூ. ஆகாதோர் சங்காத்தத்
தாலவர்கள் யோசனையால்
வாகான நீதி
வழிமறுத்த வஞ்சகத்தான்.

கூ௦. மங்கையரைக் கற்பழிக்க
வங்கணஞ்செய்கா முகரோ
டெங்குமுறவாய்த் தெருவெல்
லாமலைந்த காவாலி.

கூக. சம்பிரதாயங்கள் பல
சாற்றிப் பிரிவினைக்காய்க்
கும்புகளைக் கூட்டிக்
குழப்புங் கலகேந்திரன்.

கூஉ. திருட்டுப் பிரட்டுத்
திருவாதரத்துக்
குருட்டுமுரட்டுக்
குணத்துக்குருசாமி.

கூந. கற்றபுலவர்க்குங்
கவலைகொண்ட நல்லவர்க்கு
முற்றவொரு காசு
முதவாமகாவுலுத்தன்.

கூச. வீறுகக் கற்றவர்முன்
மேட்டிமையதாயெதிர்த்துத்
தூறுக யாவரையுந்
தூஷணிக்குந் தூர்க்குணத்தான்.

கூ௫. பொன்றிய கோபப்
புகையெழும்பி யோருரைக்காய்க்
கன்றிமனம் பொங்கிக்
கதறுங் கடுஞ்சினத்தான்.

கூசு. வாதாடிச் சூதாடி
வாயாடிப் பேயாடிக்
காதாடிக் கூத்தாடிக்
காற்றாடிக் காலாடி.

கூஎ. வெட்கமற்றுச் சிக்கதற்று
வேலையற்றுச் சோலியற்றுக்
கட்குடித்து வீணாட்
கழிக்குங் கசுமாலன்.

கூஅ. பெத்தரிக்கக்காரப்
பிசாசோடுறவாகிச்
சத்துருவினுங் கடையாய்த்
தாழ்ந்த நீசத்தனத்தான்.

கூகூ. பேய்க்காளாய்ப் பேய்க்குணமாய்ப்
பேய்க்குலமாய்ப் பேய்க்குருவாய்ப்
பேய்க்கோலப் பேய்க்கூத்தாய்ப்
பேயாடும் பேயாண்டி.

௱. எந்தெந்தச் சங்காத்த
மேதேதுலகிலுண்டோ
வந்தந்தக் கேட
தனைத்தினுக்கு முந்தினவன்.

௱க. இத்துர்க்குணக்கே
டெலாமுடைய பாதகனுன்
சுத்தசபைக்குட் போய்த்
தொழுவது கூடாதெனவே.

௱உ. பத்தியில்லாமற்
பராபரன்றன் கோவில்புக்க
லெத்தனென்று சொல்லி
யிருதயத்திலே யுணர்ந்தேன்.

௱௩. ஆவதினலம்பரனை
யாவியினலுண்மையினல்
மேவிவணங்குவதே
மேன்மையெனச் சிந்தைசெய்தேன்.

௱௪. புத்திசொல்லுமாதவர்கள்
போதகங் கேட்டாற் பதவி
சித்திக்குமென்றே
திருமனையைக் காணநின்றேன்.

௱௫. இன்னபல நீதிநினைந்
தேகசருவேசுரன்றன்
சன்னதிக்குப் போகச்
சனங்களுடனடந்தேன்.

௱௬. பாடுங்கலையாற்
பராபரனைக்கொண்டாடித்
தேடுங்குழாங்களொடு
தேவாலயஞ் சேர்ந்தேன்.

## எ. விசுவாசம்.

௱எ. சேர்ந்தேன்றயாபரனைச்
சேவித்தேன் சிந்தைகளி
கூர்ந்தேன் பணியக்
குனிந்து முழங்காலினின்றேன்.

௱அ. வள்ளலென யூதரெல்லா
மாபரிகாசங்கள் செய்து
முள்ளினாற் சூட்டு
முடிதரித்த பொற்சிரமும்.

௱௯. மொய்த்தகொடுஞ் சேவகர்தான்
மோதிவிழுந்தே பிடித்துப்
பிய்த்திழுக்க ரோமமெல்லாம்
பிய்ந்திருக்கும் நற்சிகையும்.

௧௧0. ஓராத பொய்ச்சாக்ஷி
யோடியங்கள் தூஷணங்க
ளேராத வார்த்தையெல்லா
மேற்ற திருச்செவியும்,

௧௧௧. ஆட்டுங்குதிப்பு
மடாமையுங் கண்டொன்னூர்க்குக்
காட்டுங் கருணை
கடாட்சத் திருவிழியும்

௧௧௨. கண்ட கடற்காளானைக்
காடிதுவைத் தீசோப்புத்
தண்டதனிற் பூட்டித்
தீரக்குடித்த நல்வாயும்.

௧௧௩. பாய்ந்த புலிபோல வொரு
பாதக னுங்காரமுடன்
காய்ந்தடிக்க வீங்கிக்
கன்றுப்படர்ந்த கன்னமதும்.

௧௧௪. சூடுமிரத்தக்கறையாற்
றுப்புமுமினீர்க் கறையால்
வாடி வடிவ
மறைந்த மதிமுகமும்.

௧௧௫. வன்கட்டாயக் களவாய்
வந்துகனி கொய்தவர்க்காய்ப்
பின்கட்டாய்ச் சேர்த்துப்
பிணித்த திருக்கரமும்.

கககூ. தருவிற்றிருட்டான
சங்கதியீதென்றே
குருசைச் சுமந்து
குனிந்துநின்ற கோப்புயமும்.

ககஎ. சாயாமற் கற்றாணிற்
றுன்பிணித்துச் சேர்வையெல்லா
மோயா தடிக்க
வுழுநிலம்போலா முதுகும்.

ககஅ. ஈட்டியதினுற்றுளைக்க
வேயுருவக் குத்தினதாற்
காட்டிய தெண்ணீரிரத்தக்
காயவிலாவதுவும்.

ககக. ஆதாம் நிருவாணி
யானுனென்றே மருங்கி
லேதாகிலுங் கலையி
லாதிருந்த வம்மணமும்.

க௨0. தோன்றும் பராபரனைத்
தொல்வினைக்காய் மன்றுட
லூன்றுதரங் காவில்
முடக்கு முழங்காலும்.

க௨க. சூட்சிபெறக் குருசிற்
றெங்கி மனுவுயிர்க்குக்
காட்சிதர வாணிதைத்த
கைபோற்றிருப்பதமும்.

க௨௨. சிரசுமுதற் பாதம்வரை
செம்புனலாறோடி
யுருவமெல்லாமாறி
யொளிமறைந்த மெய்யுடலும்.

கஉஙு. பார்த்தேனிளகாக் கற்
பாறையைப் போலானமன
மீர்த்தே மெழுகா
யிருவிழியாறோட நின்றேன்.

கஉச. நின்றேனடுநடுங்கி
நெஞ்சகமெல்லாங் கரைந்து
கன்றுத பாவி
கருத்தனைத்தும் வேறானேன்.

கஉரு. நோக்கினே னுகமத்தி
னூன்முறையோடே குருவின்
வாக்கினாலேசு
மரணவுருக்காணலுற்றேன்.

கஉசா. பாடுபட்ட கத்தனையான்
பார்த்தவுடனே யெனது
கேடுகெட்ட நெஞ்சிற்
கிலேசமிகத் தோன்றினதே.

கஉஎ. கண்ணாலருவி விழக்
காரணனைக் கண்டவுடன்
புண்ணாயிதையமெல்லாம்
பொங்கத்துயர் பூண்டேன்.

கஉஅ. சங்கையின்ராசா கொலையாய்ச்
சாகவரும் பாதையிலே
யங்கழுத பெண்களுடன்
யானுமழச் செய்வேனே.

கஉகூ. எப்போது மோயாம
லேசுவைக் கண்டாற்றுமத்தோ
டொப்பாரி சொல்லி
யுருகிப் புலம்புவனே.

## அ. பாடுபட்ட தியானம்.

கரு௦. மத்தே முதலாய்
வளமை யோவான் வரைக்கும்
வித்தார்மாக
விளம்பின மேரைப்படியே

கருக. ஆற்றுமாவே யுன்
னருமை மணவாள
னேற்றதுயரத்
திகழ்ச்சியெல்லா மாராய்ந்து.

கருஉ. முந்திய தோட்டத்தில்
முகாமைக் காய்பாமணையிற்
பொந்திப்பிலாத்திடத்தும்
போய்ப் போர்க்களத்திலும் போய்.

கருரு. யேசு.சுவாமி பட்ட
வெண்ணிலாப் பாடனைத்தும்
நேசமுறக் கண்டு
நினைந்து தியானிப்பாயே.

## க. கிறிஸ்துவினுற்றுமப்பாடுகளின் பேரில்.

கருச. தோட்டத்திலாதி செய்த
தோஷமதினுலேசு
தோட்டத்திற் பாடுபட்டுச்
சோரிசிந்திச் சோபமுற்ருர்.

கருரு. மகத்துவத்தின்றேவனிங்கே
மண்மீதில் வீழ்ந்து
முகத்தை மறைத்தேமும்
முறைஜெபங்கள் செய்யலுற்ருர்.

கருசு. துக்கமடைந்தார்
துயரமிகப் பூண்டார்
மிக்கபிரலாப
வியாகுலத்தினுல் மெலிந்தார்.

கஙௗ. மரணத்த வஸ்தையதாய்
வாதையெல்லாம் பட்ட
தரணத்திலுமெனக்காய்த்
தான்வேண்டிக் கொண்டிருந்தார்.

கஙஅ. தேவகோபாக்கினையின்
தீயில் விழுந்தோர் புழுப்போற்
பாவிகளுக்காகப்
பதைபதைக்கவே நெளிந்தார்

கஙகூ. வருந்திய தோராற்றுமத்தின்
வாதையினால் வேர்வை
பெருந்துளியிரத்தப்
பிரளயமாயோடினதே.

கசOO. ஆற்றுமத்தில் மாந்தர்செய்த
வக்கிரமமத்தனையு
மாற்றுதற்குத் தாதை
வரவிடுத்த பாத்திரமே.

கசக. இப்படியே யாற்றுமப்பா
டேற்றபிற காண்டகைதா
னப்புறமுந் தேகத்
தரும்பாடெலாமடைந்தார்.

## கO. கிறிஸ்துவின் சரீரப்பாடுகளின் பேரிலே.
## க தோட்டத்திற் பட்ட பாடுகள்.

கசஉ. பன்னிருவரின் ஜெருகைக்குட்
பட்ட யூதாசுவென்போன்
கன்னமிசை முத்திசெய்து
கத்தனைக் காட்டிக்கொடுத்தான்.

கசங. சத்துருவாம் யூதாச்
சதிசெய் திரண்டகமாய்
முத்தியினாலே
முதல்வனைக் காட்டிக்கொடுத்தான்.

கசச. பெற்றநன்மை யெண்ணுப்
பெரும்பாவி யூதாசு
விற்றுக்கொடுக்க
விமலன் விலையானூர்.

கசரு. கட்டியொருவக் கிரமக்
காரனைப் போலாண்டகையைத்
துட்டர்வசை பேசித்
துண்டரிக்கஞ் செய்தார்கள்.

கசசு. விள்ளரிய நன்மை செய்த
வித்தகனென்றெண்ணுமற்
கள்ளனைப்போற் பிடித்துக்
கட்டிநிந்தை செய்தார்கள்.

கசஎ. வள்ளலை யிக்கோலமதாய்
மானமறப் பிடித்துத்
தள்ளியே காய்பாவு
தன்மனையிற் கொண்டுசென்றார்.

## கக. உ. காய்பாவின் வீட்டிலே பட்ட பாடுகள்

கசஅ. அன்னவுங் காய்பாவு
மங்கவர்கள் சங்கமெல்லாம்
பொன்னுடதாளும்
புரவலன்மேற் பொங்கலுற்றார்.

கசகூ. வின்னமுறப் பேசி
வெகுண்டொரு துற்சேவகன்றான்
கன்னத்திறையவனைக்
காயமுறவடித்தான்.

கரு௦. மட்டில்லான்றன்னை யந்த
வஞ்சகர் முக்காடதிட்டுக்
குட்டியிராமுழுதங்
கோரணிகள் கொண்டார்கள்.

கருக. கைச்சரசஞ் செய்தார்கள்
காவல்தனில் வைத்தார்கள்
துட்சணர் தானேர்ந்தபடி
தூஷணங்கள் சொன்னார்கள்.

கருஉ. எண்ணுமல் வைதுதிட்டி
யிங்கிஷைகளாய்ப் பேசிப்
பண்ணுத நிந்தை
பரிகாசம்பண்ணினர்கள்.

கருங. மெய்ச்சாட்சி வேண்டாத
வீணனுக்காய் வேண்டியிரு
பொய்ச்சாட்சிக்காரர்
புலைசொலவுங் கேட்டிருந்தார்.

கருச. உத்தம வப்போஸ்தலனு
முண்மை சற்றுமில்லாமற்
சத்தியம்பண்ணித்
தயாபரனைத்தான் மறுத்தான்.

கருரு. தனைத்திடமாய் நம்பித்
தடையுரைத்த சீமோன்
மனப்பயத்தினுலே
மறுதலித்தான் மாதவனை.

கருசு. ஆற்றுதல் செய்தெவ்வுயிர்க்கு
மன்புசெய்ய வந்துதித்த
மாற்றமிலான் சாக
மரணத்தீர்ப்பிட்டார்கள்.

கருஎ. தேவகுமாரனென்று
செப்பின வார்த்தைக்காகப்
பாவிகள் கோமானைப்
பழிசெய்யத் தீர்த்தார்கள்.



கரு அ. கட்டின கட்டோடே
காய்பாவின் வீட்டினின்று
துட்டர்களக்கியானத்
துரைக்களிக்கப் போனார்கள்.

கருக. கூட்டமெல்லாங் கொம்பிக்
கொதித்துப் பிலாத்தரசன்
வீட்டில் வந்தையன்மேல்
மிகைசுமத்தச் செய்தார்கள்.

## கஉ. ந. பிலாத்துவின் வீட்டிற் பட்ட பாடுகள்.

ககூ0. பொந்திப்பிலாத்துவின்பாற்
பொல்லாத யூதர்சனந்
தந்தமுறைப் பாட்டைச்
சகித்திருக்கச் சம்மதித்தார்.

ககூக. ஆசாரிமார் முறையிட்
டார்கடியஞ் சொன்னதற்குப்
பேசாமலங்கே
பிலாத்துவின்முன்பாக நின்றார்.

ககூஉ. சாற்றும் பகைவர் குற்றச்
சாட்டுதலெல்லாங் கேட்டு
மாற்றமுரையாமல்
மவுனமதாக நின்றார்.

ககூங. எத்தன் சனத்தை
யெடுத்துவிட்டோனென்று சொன்ன
பெத்தரிக்கக்காரர்
பிரளியதெல்லாங் கேட்டார்,

ககூச. பாவிகளுக்காகப்
பரிந்து பிணைப்பட்டதினாற்
பாவமற்ற சோதியொரு
பாவியைப் போற்றாழ்ந்து நின்றார்.

கசுரு. பொங்கி யெரோதேயும்
பொலிந்த விராணுக்களுடன்
பங்கப்படுத்திப்
பரிகாசஞ்செய்துவிட்டான்.

கசுசு. பித்தனென்று மேதுமற்ற
பேதையென்றுஞ் சொல்லி வெள்ளை
வஸ்திரத்தைப் போற்றியவ
மானப்படுத்திவிட்டான்.

கசுஎ. இத்தனையாய் ஞானத்தோ
டெவ்வுயிருஞ் செய்தபிரான்
பித்தனென்று சொல்லப்
பிரியமாய்க் கேட்டிருந்தார்.

கசுஅ. தொல்லையாக்கலாதி செய்த
துஷ்டன்பரபாக்
கொலைபாதகனோடே
கூடநின்றார் கோததில்லான்.

கசுகூ. திண்டாடி வெட்டித்
திருடிக் கொலைபுரிந்த
சண்டாளனோடு
சரியாக்கப்பட்டு நின்றார்.

கஎ0. அடிமையைப்போலே மரத்தி
லாண்டகையைக் கொன்று
விடுதலைக்காகாதவனை
விட்டுவிடக் கேட்டார்கள்.

கஎக. பொருள் யாவுங் காக்கும்
புரவலனைக் கொன்று
பரபாவை விட்டுவிடப்
பாதகர்கள் கேட்டார்கள்.

௧௭௨. சத்துருக்களான நரர்
தப்பியுயிர் பிழைக்க
வித்தகனார் சாக
மிகவுமன தானார்.

௧௭௩. ஆடையுரிந்தம்மணக்கோ
லத்தோடோர் கற்றூணிற்
பீடையுறக் கட்டிப்
பெலத்தடிக்கச் செய்தார்கள்.

௧௭௪. காரிருள் சூழக்கியானக
காவலன்றன் சேர்வையெல்லாம்
வாரதினால் வீச
மருகித் துயரானார்.

௧௭௫. இருப்புக் கொடுக்க
திசைந்த சவுக்கா
னெருப்பெழக்காய்ந் தடித்து
நெட்டூரஞ் செய்தார்கள்.

௧௭௬. எண்ணமறவாரதினா
லேயடித்ததல்லாம
லண்ணலுமைக்குட்டி
யகந்தை மிகச் செய்தார்கள்.

௧௭௭. தூறாய்ப் பரிகாசத்
தோன்றலெனத்தோன்ற வைத்து
வீறாய்ச் சகலாத்து
மேற்சட்டையிட்டார்கள்.

௧௭௮. முள்ளுக்களாலோர்
முடிசமைத்தாங்கார முடன்
வள்ளல் சிரத்தழுத்தி
வைத்திகழ்ச்சி செய்தார்கள்.

கஎகூ செங்கோலுக்கொப்பாய்த்
திகிரிக்கோலைக் கொடுத்து
நங்காக யூதர்களி
ராசாவென்றேத்தினர்கள்

கஅ0. மேலவனைத் துப்பி
மிகுந்த சரசங்கள்செய்து
கோலைவாங்கிச் சிரத்திற்
கோபித்தடித்தார்கள்.

கஅக ஆவலுளோர்போல் முழங்
காலூன்றித் தெண்டனிட்டுக்
காவலனைத் தானிறைஞ்சிக்
கன்னத்தறைந்தார்கள்.

கஅ௨ புண்ணியனை யிவ்விதமாய்ப்
பூரியரெலாங் கூடி
யெண்ணத்துலையா
விகழ்ச்சியெல்லாஞ் செய்தார்கள்.

கஅ௩. பொந்திப்பிலாத்தரசன்
புண்ணியனை விட்டுவிடத்
தந்துசெய்து பார்த்தாலுந்
தன்னால் முடியாமல்.

கஅ௪. தண்ணீரெடுத்துத்
தனதுகரம் விளக்கி
யெண்ணமற் கொல்ல
விறையவனைக் கையளித்தான்.

கஅரு சற்றுமிரக்கமில்லாச்
சண்டாள யூதருக்காய்க்
குற்றமிகும் பாவக்
கொடுமைப் பிலாத்ததிபன்.

கஅசு கள்ளன் பரபாக்
கலாதிமிகும் பாதகனை
விள்ளரிய தோஷம்
விளைத்தவனை விட்டுவிட்டு.

கஅஎ. உள்ளமெல்லாமன்பா
யுறவாயுதித்தெழுந்த
வள்ளல்தனை நீண்ட
மரத்தேற்றக் கையளித்தான்.

கஅஅ. குற்றமில்லையென்று சொல்லிக்
கூறினவனீதி தப்பிக்
குற்றமில்லான்றன்னைக்
கொலைசெய்ய வொப்புவித்தான்.

கஅகூ. நீதியில்லாத
நிருபன் பிலாத்தரச
னீதிமான்றன்னை
நெடுங்கொலைசெய்யக் கொடுத்தான்.

## கரு. ச. கொல்கதா மலையிற் பட்ட பாடுகள்.

ககூ0. சுந்தரஞ்சேர் தேவசுதன்
சொல்லரிய பாடுபட்டு
நிந்தைக் குருசேறும்
நெஷ்டூரமென் சொலுவாம்.

ககூக. கொல்கதாவென்ற மலைக்
கோட்டிற் கொலைப்படுத்த
வல்லவனைக் கொண்டுசென்ற
வஞ்சகத்தைச் சொல்வதுவோ.

ககூஉ. வலியபிலாத்து
மனுமகனைக் கொன்று
சிலுவைதனிலேற்றத்
தீர்மானஞ் செய்தவுடன்.

கசரு. அன்ன சமையத்
தடர்ந்துநின்ற சேர்வைவயெல்லா
மன்னவனைத் தங்கள்
வசமாக்கிக் கொண்டார்கள்.

கசச. சேவகரெலாஞ் சேர்ந்து
தேவன்றிருவுடலில்
மேவுஞ்சகலாத்து
மேற்சட்டையைக் களைந்தார்.

கசரு அண்ணல் சொந்த வஸ்திரத்தை
யங்குடுத்திப்பாதகர்கள்
வண்ணச்சிலுவை
மரத்தேற்றக் கொண்டு சென்றார்.

கசசா. முள்ளின் முடிமீது
மோதிவிதனமுறத்
தள்ளிச்சிலுவை
தனைச்சுமத்தி வைத்தார்கள்.

கசஎ. பந்தமிகும் பாரப்
பணையைத் தோள்மேற் சுமத்திக்
கொந்தளித்துக் கூட்டிக்
கொலைக்களத்துக்குப் போனார்.

கசஅ. மேனியெல்லாங் காயமுற
மேவும் விரணத்துயராற்
கூனிக்குனிந்து
குருசைச் சுமந்து சென்றார்.

கசகூ. கள்ளாண்மை மாந்தர்
கனிதின்ற பாதகத்தாற்
றள்ளாடி வீழ்ந்து
தருக்குருசைக்கொண்டு சென்றார்.

௨௱. அத்தன்மொழி மறுத்த
வாதத்திடரகற்றச்
சுத்தன் சிலுவை
சுமந்து தயவாய் நடந்தார்.

௨௱௧. பாவச்சுமையிறக்கிப்
பாவிகட்கு நன்மை செய்யத்
தேவப்பிரகாசன்
சிலுவை சுமக்கலுற்றார்.

௨௱௨. எல்லாத்தையும் படைத்தி
யாவினையுந்தாங்கினவன்
வல்லார் குருசெடுக்க
மாட்டாதுலைந்து நின்றான்.

௨௱௩. பாரச்சிலுவைப்
பருஞ்சுமையைக் கொண்டுமலை
வாரத்திற் போமுன்
மரிப்பாரென்றீனரெல்லாம்

௨௱௪. சீமோன் சிரோனேயைச்
சேர்ந்துவழியிற் பிடித்துக்
கோமானெடுத்த
குருசைச்சுமத்தி வைத்தார்.

௨௱௫. சேனைத்திரள்போற்
றிருநாட்கு வந்தவர்கள்
ஞானக்குருவி
னடத்தையைக்காணத்தொடர்ந்தார்.

௨௱௬. வாடிச்சிலுவை
மரத்தறையக்கொண்டு செல்லும்
வேடிக்கை பார்க்க
வெகு சனங்கள் பின்றொடர்ந்தார்.

உ௱எ. பெண்பிறந்த பேர்களவர்
பேரினிலொப்பாரி சொல்லிக்
கண்பிறந்த நீருதிர்த்துக்
காவலனைச் சூழவந்தார்.

உ௱அ. தேவனவர் கடமைத்
தேர்ந்து பார்த்தெருசேலம்
பாவையரே யுங்களுக்கும்
பாலகர்க்குந் தானமுவீர்.

உ௱கூ. பச்சை மரத்துக்கிப்
பாடுகளெலாம் புரிந்தா
லிச்சையின் பட்டமர
மென்னபடு மென்றிசைத்தார்.

உக0. கொற்றவனோடே
கொலைசெய்ய வேறிரண்டு
குற்றமிகும் பாதகரைக்
கூடக்கூட்டிப்போனார்.

உகக. வஞ்சர் கபால
மலையதனில் வந்தவுடன்
வெஞ்சினத்தினமேல
வினைகள் பல செய்யலுற்றார்.

உகஉ. போளங் கலந்த
புளித்தமது விரசம்
நீளுங்கிருபை
நிரந்தரனுக்குக் கொடுத்தார்.

உகரு பிச்சுரசத்தைப்
பிரியமுடனே ருசிபார்த்
தச்சயனுட்கொள்ளா
தகற்றிவிடலானார்.

உ௧௪. பாதகரிலோர் தன்வல
பக்கத்திடத்தொருத
னுதவணை நடுவு
மாகக் குருசறைந்தார்.

உ௧௫. மிக்க பராபரன்றன்
மேலான தேவசுத
னக்கிரமக்காரருக்குள்
ளாகவெண்ணப்பட்டு நின்றார்.

உ௧௬. அத்தன் குருசி
லறையுண்டிருக்கையிலுஞ்
சித்தமுடனேழு
திருவசனஞ் செப்பலுற்றார்

உ௧௭. யேசுநசரோன் யூத
ரோந்தலென வேந்தெழுதித்
தேசுலவுகத்தர்
சிலுவை நுனியில் வைத்தான்,

உ௧௮. சிலுவைமரத்தேற்றினபின்
சேவகர் சேர்ந்தண்ணல்
கலையை யெடுத்துக்
கதிக்க நாற்பங்கு செய்தார்.

உ௧௯. ஐயன்றெரிசி
யறைந்தபடி யாண்டகை தன்
றையலில்லாச் சட்டையின்மேற்
றுயமது போட்டார்கள்.

உஉ0. அவ்வழியிற் செல்வோரு
மாசாரி மார் தலைவர்
தெய்வனிடக் கள்ளனுந் துற்
சேவகருந் தூஷணித்தார்.

உ௨க. அங்கவர் கடங்கடலே
யாட்டிச்சீயுன்னே ரட்சித்
திங்கிறங்கென்றேசி
யிகழ்ச்சிபல செய்தார்கள்.

உ௨௨. என்னவிவன் மற்றோரை
யிரட்சித்தானிப்போது
தன்னையிரட்சித்தால் யூதர்
தங்களரசாகுமென்றார்.

உ௨௩. தேவன் மகனாகிற்
சிலுவையினின்றிறங்கு
மேவியுனை நம்பி விசு
வாசிப்போமென்று சொன்னார்.

உ௨௪. இவ்வாறெலாரு மிகழ்ந்
தீனமுறப்பேசி
யொவ்வாதனேக
முதாசனப் பாட்டோதலுற்றார்.

உ௨௫. சிலுவை மரத்தடியிற்
றேவமாதாவு
மலேவா யோவானு
மனுமகனைப் பார்த்து நின்றார்.

உ௨௬. ஆறுமுதலொன்பதள
வாகவந்த காரமுண்டாய்
வேறுபடச் சூரியனு
மிக்க விருளானதுவே.

உ௨௭. ஆகம் நிறைவேறி
யனைத்து முடிந்ததினாற்
றாகமுண்டென்றேசுபரன்
சாற்றினாரப்போது.

உஉஅ. ஓடியொருத
னுவர்க் கடலிற் பாசிபற்றிக்
காடி துவைத்தாம்பற்
கலைதனிற் கோர்த்துக் கொடுத்தான்.

உஉகூ. காடியை யுட்கொண்டதற்பின்
கர்த்தர் தலைசாய்த்துத்
தேடுமுயிர்க்காய்த் தமது
சீவனையும் விட்டுவிட்டார்.

உ௩0. அந்தாதியே நின்
னருட்கரத் தென்னாற்றுமத்தைத்
தந்தேனென்றோதித்
தலைசாய்த்துச் சீவன்விட்டார்.

உ௩க. அத்தருணந் தேவால
யத்திரைமேலே துவக்கிச்
சத்தமுறக் கிழிந்து
தாணியெலாமதிர்ந்து.

உ௩உ. கல்லறைகளுந் திறந்து
கன்மலைகளும் பிளந்து
வல்லபரிசுத்த
வான்களெழுந்தார்கள்.

உ௩௩. சேர்வைத் தலைவனிந்தச்
செய்கையெல்லாங் கண்டவுடன்
பார்வைக்கிவரோ
பரமசுதனாகுமென்றான்.

உ௩ச. வேடிக்கை பார்ப்பதற்காய
வேண்டிவந்த கும்பலைத்துங்
கூடிநின்று மார்படித்துக்
கொண்டுதிரும்பினர்கள்.

உ௫௫. ஆரியன் மேனேசமுற்ற
வாடவருமாதர்களுந்
தூரநின்று நோக்கித்
துயரமிகப் பூண்டார்.

உ௫௬. கள்ளரிருவர்
கணைக்காலெலும் பொடித்தார்
வள்ளல் முதவே
மரித்ததினுல் விட்டுவிட்டார்.

உ௫௭. ஈட்டியினுலோர்த
னிறைவிலாவைத் துளைக்கக்
கூட்டிய நீருங்
குருதியும் பொங்கினதே.

உ௫௮. அறிமத்தியா வூரா
னையோசேப்புத்
திறமைப் பிலாத்திடத்திற்
சென்றுத்தரவெடுத்து.

உ௫௯. மூந்திரவில் வந்த
முனிநீக்கோதேமுடனே
கந்தவர்க்கத்தோடு
கலையதுவுங் கொண்டுவந்து.

உ௬0. ஐயன் சடத்தை
யதீகதுயராலிறக்கித்
துய்யபரிமளத்தாற்
சூடியலங்கரித்து.

உ௬௧. சீமோன் யோசேப்பு வெட்டிச்
செய்த புதுக்கல்லறையிற்
கோமான் சடத்தைக்
கொணர்ந்தடக்கஞ் செய்தார்கள்.

உ௪௨. புல்லர் பிலாத்திடத்திற்
போய்விடைகொண்டே திரும்பிக்
கல்லறையில் முத்திரையுங்
காவலதும் வைத்தார்கள்.

உ௪௩. இத்தனையாய்ப் பாவிகட்கா
யேசுபட்ட பாடனைத்துஞ்
சித்தமுருகித்
தியானிக்கச் செய்வேனே.

## ௧௪. மனவிசாரம்.

உ௪௪. அன்புள்ள சுவாமியெனக்
காகவிங்கேநீர் மிகவுந்
துன்பமுறப்பூண்டு
துயர்படவு மானீரோ.

உ௪௫. எந்தையே பாவமதா
லெங்களுக்குண்டாகிய நிற்
பந்தமனைத்துஞ் சுமந்து
பாடுபடலானீரோ.

உ௪௬. வஞ்சகனுன்செய்த வெல்லா
மாறுபாட்டுக்காகத்
தஞ்சமற்றிங்கையா நீர்
தாழ்த்தி பண்ணப்பட்டீரோ.

உ௪௭. கொடுமையெலாஞ் செய்த
கொலைபாதகர்க்கா
யடிமையைப்போலிங்கே யென்
னாண்டவனே நின்றீரோ.

உ௪௮. உன்னதத்திலே யுயர்ந்த
வொப்பதற்ற மாவேந்த
ரின்னவிதக்கோல
மெடுக்க மனதானீரோ.

உசகூ. நீசத்தனனெனது
நிந்தையனைத்துஞ் சுமந்து
மாசற்ற சோதி
மகாதயவாய் நின்றாரோ.

உடு0. சற்றெனினும் பாவமில்லாத்
தம்பிரா னேயபுத்திரன்
குற்றமிகச் செய்தவர்போற்
கோட்டிகொள்ளப்பட்டாரோ.

உடுக. கடன்பட்ட பாவி
கடனையெல்லாந் தீர்க்கக்
கடன்படாக் கத்தன்
கடன்றீர்க்கலானாரோ.

உடுஉ. என்னசெய்தீரையா நீ
ரித்தீங்குமக்கு வர
வன்னதெல்லாம் பாவி
யடியேன்செய் பாதகமோ.

உடுகூ. கறைப்பட்ட பாவக்
கடியினடியாரைச்
சிறைப்பட்டு மீட்கத்
திருவுளமானீரோ.

உடுச. கட்டுண்டெந்நாளுங்
கடுஞ்சிறைக்குள்ளே கிடந்து
வெட்டுண்க மாந்தர்
மிகநேரஸ்தோராமே.

உடுடு. சின்னத்தனமாயான்
செய்ததுடுக்கா லெணைத்தான்
கன்னத்தடிப்பதற்குங்
கள்ளனைப்போற் கட்டுதற்கும்.

உ௫௬. நிந்தைப் படுத்துதற்கும்
நெஷ்டூரஞ் செய்வதற்குந்
தொந்தளிக்கவென்னைக்
கொடுஞ்சிறைக்குள் வைப்பதற்கும்.

உ௫௭. எண்ணூழிகாலத்
தெரிநாகப் பேய்களென்னைப்
பண்ணாத கோட்டியெல்லாம்
பண்ணுதற்கும் ஞாயமலோ.

உ௫௮. ஆனாலும் பாவியிந்த
வாக்கினைக்குள்ளாகாமற்
றானே நீரிவ்விதமாய்த்
தாழ்த்தி பண்ணப்பட்டீரோ.

உ௫௯. என்முகத்திற்றுப்பி யென்னை
யீங்கிதை செய்யாப்படிக்கு
நின்முகத்திற்றுப்ப வென்ன
நீதியதுண்டையாவே.

உ௬0. பொல்லாத வஞ்சப்
புலையனன்செய்த வினைக்
கெல்லாருமென் முகத்தி
லேயுமியவே ஞாயம்.

உ௬க. வெட்கமற்றுப் பாவமதில்
வீழ்ந்திலட்சை கெட்டலைந்த
வக்கிரமக்கார
னகந்தைக்கீ துத்தரிப்போ.

உ௬உ. நற்பணியில்லா
நடக்கையைக் கண்டாரேனு
மற்பன் முகத்துமிந்தா
லாங்காரமாவேனே.

உசுரு. சிறியே வஞ்சரெல்லாஞ்
சேர்ந்துன்றிரு முகத்திற்
காறியுமிந்துங்
கனபொறுமையானீரோ.

உசுச. பாவமொன்றுஞ் செயயாப்
பரிசுத்த வஸ்துனது
தேவதிருமுகத்திற்
செய்யும் நிந்தை கொஞ்சமதோ.

உசுரு. பெத்தரிக்கத்தால் விழுந்த
பேதுருவைத் தள்ளாமற்
சித்தமிரங்கித்
திருவிழியாற் பார்த்தீரே.

உசுசு. அவ்வாறிந்நாள்வரைக்கு
மாகாத பாவிகளை
யெவ்வேளையுங் கண்
டிரங்க மனதானீரோ

உசுஎ. நிற்பந்தமாய் மடிய
நின்றனக்குத் தீர்ப்பான
தற்பனுயிர்வாழ்ந்
தழியாதிருப்பதற்கோ.

உசுஅ. நித்திய சாவுக்கிடமாய்
நீசனுன் போகாம
னுத்தமனீர் சாக
வுவந்து சித்தமானீரோ.

உசுகூ. பயித்தியகாரனெனப்
பண்ணிவைத்த கோலஞ்
சயித்திருக்கவென்னுற்
றயவதுமக்குண்டாச்சோ.

உ௭0. வலிய கொலையாதகன்றன்
வஞ்சவுயிர் தப்பச்
சிலுவையின் மீதேறத்
திருவுளமானீரோ.

உ௭க. சதைதெறிக்கச் செந்நீர்
சரீரமெல்லா மோட
விதனமுறவையா
மிகவடிக்கப்பட்டீரோ.

உ௭உ. சிக்கதற்று வெட்கமற்றுச்
சிலையதற் றம்மணத்தோ
டக்கிரமக்காரர் செய்த
வாகாத்தியத்தாலே.

உ௭௩. எந்தை தமதுடையெ
லாமுரியப்பட்டதினல்
வந்தவவமானத்தால்
வாடிநிற்கலானரோ.

உ௭௪. தீயபிசாசெம்மைச்
சினந்தடிக்கச் செய்யாம
லாயனிங்கே யாடுகளுக்
காயடிக்கப்பட்டாரோ.

உ௭௫. எள்ளத்தனை முள்
ளெனுங்கழலிற் றைத்தவுடன்
கள்ளத்தனன் மிகுந்த
கஸ்திப்படுவேனே.

உ௭௬. மிஞ்சின முட்கூருருவ
மெய்ச்சிரமெலாந் துளைத்த
சஞ்சலத்தாலையா
தவித்து நிற்கலானீரோ.

உஎஎ. சிங்காரித்தீனர்
சிரத்தைமினுக்கினதற்
கெங்கோன்றலைக்கித்
தனைவாதை வந்ததுவோ.

உஎஅ. வாயினுற் றூஷணமும்
வம்புமே சொல்லிவரும்
பேயனுக்கல்லோ கசப்பும்
பிச்சுமுமக்காகாதே.

உஎகூ. பூணுகின்ற பாவப்
புலையனிருகால் கரத்தி
லாணி கடாவத்தகும
லாதுமக்கீதாவானேன்.

உஅ0, நாட்டமற்ற பாவியென்ற
னஞ்சகமா நெஞ்சகத்தி
லீட்டியினுற் குத்தா
திறைநீர் குத்துண்டீரோ.

உஅக. என்னை யுயர்த்தி
யிறைவான் மேலாக வைக்க
நின்னைமிகத் தாழ்த்தி
நீசனைப்போனின்றீரோ.

## கரு. மனஸ்தாபம்.

உஅஉ. ஐயாவெனைப் படைத்த
ஆதிபரப்பொருளே
துய்யாவுமையித்
துயரமெல்லாஞ் செய்தவரார்:

உஅரு. பாதகமெல்லாம் புரிந்த
பாவியடியேனிருக்கக்
கோதில்லானே நீர்
கொடுங்கொலைக்குளாவானேன்.

உஅச. வெஞ்சினப் பேயக்காளாய்
மெலிந்து சிறைப்பட்டிருந்த
வஞ்சகனை மீட்பதற்காய்
வந்தடிமையாவானேன்.

உஅரு. பாவத்தின் கட்டறுத்துப்
பாதகனை மீட்டுவிடச்
சீவப்பிரபு
திடுக்குறக் கட்டுண்பானேன்.

உஅசு. வானோரறிய வெகு
மானமெல்லாம் நானடைய
ஆனாலுமிந்தவவ
மானமுமக்காவானேன்.

உஅஎ. பாரமிகுங் கொடிய
பாவச்சுமை யிறக்கக்
கோரமெல்லாம் பட்டுக்
குருசைச் சுமப்பானேன்.

உஅஅ. செய்கின்ற பாவச்
சிறியேனுயிர் வாழ்க
வையகத்தினீர்தான்
மரித்தடக்கமாவானேன்.

உஅகூ. மத்தியஸ்தமா யெனக்காய்
வந்ததினாலிவ்விதமாய்க்
கஸ்தியெல்லாம் பட்டுக்
கடாட்சித்துக்கொண்டீரோ.

உகூ0. பிணையாளியாகப்
பிணைப்பட்டெனக்கே
துணையாக நின்று
துயரமெல்லாம் பட்டீரோ.

உ௯௧, அச்சமில்லாப் பாவி
யடியேனுக்காய் வேண்டிப்
பட்சமுடனேயா
பரிந்து நிற்கலானீரோ.

உ௯௨ என்றாலும் பாதகனை
யீடேற்றவையா நீர்
நன்றாகச் சம்மதித்து
நாட்டமனதானீரோ.

உ௯௩, ஆச்சரியஞ் சாவதற்கென்.
றுண்டவர் வாறார் மேய்ப்பர்
தாட்சியுடன் மந்தைகட்காய்த்
தஞ்சீவனைத் தாறார்.

உ௯௪. குற்றமிகச் செய்த
கொடியோனைத் தப்பவைக்கக்
குற்றமற்ற மீட்பர்
கொலைக்களத்துக்குப் போறார்.

உ௯௫. சன்மார்க்கராக்கினைக்குள்
ளாய் விழுந்துதான் மரித்தார்.
துன்மார்க்கனுக்குச்
சுகமுமுண்டு சீவனுண்டு.

உ௯௬. உள்ளங்காலைத் துவக்கி
யுச்சிமட்டும் பொல்லாப்பாற்
கொள்ள நிறைந்த
கொடும் பாவியானடியேன்.

உ௯௭. நன்மையற்று வீணாக
நானிலத்திலே யிருக்குந்
துன்மையுற்ற சண்டாளன்
றுன்பமுறவே ஞாயம்.

உகூஅ. இவ்விதமாம் வாதையை நீ
ரேற்றவுமதுத் தரிப்ப
தெவ்விதமுன் பட்ச
மிரக்கமன்பு மட்டுளதோ

உகூகூ. நானோ வுலகத்தோ
டேவாழ்ந்து நாள்விடுத்தே
னேனோவுமை முழுது
மிவ்வித நிற்பந்தமுறும்.

௩௱. இத்துதியைப் பாட
வெவனுலாம் நன்றிகெட்ட
சத்துருக்களென்ன
சரியுபகாரம் புரிவார்.

௩௱க. நீதற்றுனக்குச்
செலுத்தத் தகுமான
தேதென்றெவர்க்கு
மிருதயத்திற்றோன்றுதே.

௩௱உ. ஆண்டவனே நின்றயவை
யன்பை யோசித்தடியேன்
மீண்டுமெதற் கொப்பிடவு
மேதினியிலே யறியேன்.

௩௱௩. பின்னெப்படித்தான்
பிரதிநலமளிப்பே
னென்னபதிற் சொல்வே
னிறைஞ்சியிங்கே வெட்கி நிற்பேன்.

## கசு யூதர்களின் நன்றிகேடு.

௩௱ச. அலையாதென்னுற்றமமே
யப்பாலுஞ் சென்று
கொலைகார யூதர்
கொடுமையைச் சிந்திப்பாயே.

௩௱௫. ஆதத்தைச் செய்தவனுக்
காயொரு பெண்ணைக் கொடுத்துப்
போதத்தயை செய்
புராதனனைக் கொன்றாரோ.

௩௱௬. எட்டுப்பேருஞ் சலத்தி
லேயழியாமற் காத்து
விட்டதற்கோ புத்திரர்கள்
வேதனைசெய்யத் துணிந்தார்.

௩௱௭. கல்தேயர் தேசத்தாரைக்
கானுடாள வைத்த
வல்லமையை யூதர்
மறந்துதான் போனாரோ.

௩௱௮. ஆனசாராளை
யபிமெலேக்கும் பார்வோனு
மானமழிக்காதகற்றும்
வண்மை மறந்திட்டாரோ.

௩௱௯. உள்ளபடி யூதர் தந்தைக்
குற்றமலடகற்றிப்
பிள்ளைவரந் தந்த
பெருமானென்றெண்ணலேயோ.

௩௱௰. ஆபிரகாமன் றுமல
டாயிறந்தால் யூதர்குலந்
தீவிரமாய்க் கொல்லவுனைச்
சேர்ந்துவர மாட்டாரே.

௩௱௧௧. தொண்ணூற்றோராண்டு
தொலைந்த மலடிமக்கள்
பண்ணாத கீர்த்தியெல்லாம்
பண்ணமனம் வைத்தாரோ.

௲கஉ. எலியேசரீசாக்குக்
கென்று பெண்ணைத்தேட
வலியவெதிராக
வரச்செய்த மாதவனே.

௲கந. இலாபானின் மக்களை
யியாக்கோபுக்கீய்ந்து
வலாபேரெடுக்க வைத்த
மன்னவனென்றெண்ணலையோ.

௲கச. பஞ்சதுதினுல் மெலிந்த
பன்னிரு பிதாக்களுக்கும்
நெஞ்சத்தோடீவளித்த
நேயனுக்கோ தீமைசெய்தார்.

௲கரு. ஏழாண்டு பஞ்சத்
தெகிப்பத்தில் யோசேப்பைத்
தாழாமலாதரித்த
தன்மமதன்மமாச்சோ.

௲கசு. நேராய்ச் சிறைமீட்
டிரட்சிக்காதே போனற்
பாரோனடிமைகளிப்
பாதகங்கள் பண்ணுரே.

௲கஎ. ஆற்றிலெறியுண்டமிழ்ந்தி
யாவிபோம் பாலகரை
யேற்றதற்கோ இவ்வா
றெபிரேயர் செய்தார்கள்.

௲கஅ. பத்துவித வாதையினற்
பாழெகித்தைத் தாழ்த்தியிந்தச்
சத்துருக்கள் சொந்தச்
சனமென்றே யெண்ணினையோ.

௫௧௯. நானூறு சங்கம்
நலிந்த சிறைமீட்டதைத் தா
னாலும் யூதர்மறந்
தாகடியஞ் செய்தாரோ.

௫௨0. கிடைமறித்து மேய்க்குங்
கிழயக்கோ தந்த
இடையர் குலத்தினுக்கிவ்
கென்ன புத்தியுண்டாகும்.

௫௨௧. நன்மனதாய் மன்னாவை
நாற்பதாண்டீந்ததலாற்
கன்மலையிற்றண்ணீர்
கனிந்தளித்த காரணனோ.

௫௨௨. அக்கினித் தூண்மாலையினு
மம்புதத் தூணைப்பகலு
மொக்கவளித்தாதரித்த
வுத்தமர்க்கோ நிந்தைசெய்தார்.

௫௨௩. கோட்டுமிருகங்கள் பல
கொள்ளிவாய்ச் சற்பமுற்ற
காட்டிலமுதளித்த
காரணனையோ பகைத்தார்.

௫௨௪. சேதமற நாற்பதிலுஞ்
சீனாவனாந்திரத்திற்
பாதரட்சை யாடை
பழசாகக் கண்டாரோ.

௫௨௫. அத்தனை யற்புதங்கண்
டன்றே வனாந்தரத்தி
லெத்தனையாயுன்னை
யிகழ்ந்தாரொன்றெண்ணலையோ.

௩௨௬. அன்று வனுந்தரத்தி
லாகடிய யூதர்களைக்
கொன்ற பழிக்கின றனையுங்
கொல்லத் துணிந்தாரோ.

௩௨௭. ஆதங்கொடுத்த வந்த
காரவிருளகற்ற
வேதங்கொடுத்த மதி
வித்தகனையோ வெகுண்டார்.

௩௨௮. வானத்திடி முழங்க
மாமலைமேலக்கினியின்
ஞானத்திடையினின்று
சத்தியமறை தந்தவனே.

௩௨௯. விற்பனமோடே சீனை
வெற்பதின் மேலேயிருந்து
கற்பனைபத்துங் கொடுத்த
காரணனின் கண்மணியோ.

௩௩௦. கொண்டல் வளைந்தெக்காளங்
கூறக்கொடு முடியிற்
கண்டவரெலா நடுங்கக்
காட்சியளித்தவனே.

௩௩௧. சாபமெல்லாமாசீர்வா
தங்களாய் மாற்றிவிட்டுக்
கோபமுறப் பிலேயாங்
கொண்டபகை தீர்த்தவனே.

௩௩௨. மாட்சிமையாய்ப் பத்து
மறைப்பெட்டிமேலிருந்தங்
காச்சரியமாயோர்தா
ஞற்றைப் பிரித்தவனே.

௫௫௩. அத்தமிக்கச் சூரியன்போ
காமலிழுத்தே நடுவா
னத்தில் வைத்து யூதர்கட்கு
நல்லவெற்றி தந்தவனே.

௫௫௪. சந்ததியெலாம் விளங்கத்
தாவீதின் வங்கிஷத்தைச்
சிந்தையினுற்றெரிந்த
செய்கையெல்லாம் வீணுச்சோ.

௫௫௫. எத்தனையோ யாரா
லியம்பலாம் யூதர்தமக்
கத்தனையாய் நன்மைசெய்த
வாண்டகை யைக்கொன்றாரோ.

௫௫௬. சீயோன் குமாரிதனைச்
சேர்ந்து மணஞ்செய்யவந்த
ஆயோனையிந்த
அலங்கோலஞ்செய்தாரோ.

௫௫௭. செத்தவரையெழுப்பச்
செய்தவுமைக் சொல்வதற்கோ
சத்துருக்களெண்ணிச்
சதிமானஞ் செய்தார்கள்.

௫௫௮. எவ்வுயிருங் காக்கு
மிரட்சகனைக் கொல்வதுவே
செவ்வையென்றே யூதர்சனந்
தீர்மானஞ் செய்தார்கள்.

௫௫௯. சொந்தமெனத் தங்கள்குலத்
தோன்றலென வந்தவருக்
கிந்தவித நன்மைசெய்ய
வெண்ணினதோ யூதர்சனம்.

## கஎ. ஆற்றுமைப் பெண்ணேப்பாரி.

௩சய0. நன்றியிதெல்லா மறந்து
நாயகனை நாணமன்றிக்
கொன்ற துரோகக்
கொலைகாரியானேனே.

௩சஎக. போதத்தலையை புரிந்த
புண்ணியனுக்கேறுத
பாதகத்தைச் செய்த
பழிகாரியானேனே.

௩சஉ. தன்னுயிரை விட்டென்
றனதுயிரை யாதரித்த
மன்னுயிருக்கன்பை
வதைசெய்து போட்டேனே.

௩சங. எந்தனிரு கண்மணியை
யென்பிராண நாயகனை
இந்தனைசெய்த மகா
தெஷ்டரியானேனே.

௩சச. என்னை வலியத்தேடி
யென்பாலிருக்க வந்த
மன்னவனைக் கொன்றமுழு
வஞ்சகி நானுனேனே.

௩சரு. சத்துருவானாலு மெனைத்
தற்காத்த நாயகன்மேற்
பத்தியில்லாப் பஞ்சமா
பாதகத்தியானேனே.

௩சசு. வன்மப் பசாசை
யடக்கியெனை வாழ்கவைத்த
தன்மத்துரையைச்
சதிசெய்து கொன்றேனே.

௩௪௭. பற்றுதலே யில்லாமற்
பத்தாவைக் கொன்றுவிட்டுச்
சற்றுமுருகாத
சண்டாளியானேனே.

## ௧௮. வியாகுலம்.

௩௪௮. என்னூற்றுமாவே
யிரட்சகரிங்கே கொலையா
யுன்னால் மடிந்த
வுபகாரந் தோன்றாயோ.

௩௪௯. தேவாதி தேவனிங்கே
சீவன்விட்டு மாண்டதைத் தான்
பாவாசையாலுழன்ற
பாதகிநீ பாராயோ.

௩௫௦. சீவனுனக்காய் மடிந்து
செத்திருக்கப் பொல்லாத
பாவியுனக்குப்
பயம்வராதேபோமோ.

௩௫௧. சாகாத வஸ்துனக்காய்ச்
சாவானுரென்றாலு
மாகாத பாவியுன
தாசையின்னஞ் சாகாதோ.

௩௫௨. அசையாயோ பாவி
யனைத்து மசையச்சே
யிசையாயோ முன்போ
லினியுமிருப்பாயோ.

௩௫௩. கற்குன்றெலாம் பிளக்கக்
கண்டாயே யென்றாலுந்
துற்குண நெஞ்சுன்னைவிட்டுத்
துன்னிப் பிளவாதோ.

௩௫௪. உன்னத வஸ்திங்கே
யுனக்காய் மடிந்திருக்கப்
பின்னையுமுன்னெஞ்சம்
பிளந்துருகமாட்டாதோ.

௩௫௫. இச்சைகளுக்கெல்லாந் தா
னின்னமின்னஞ் சாகாம
லச்சமற்றுநீ நடந்தா
லாக்கினைக்குள்ளாவாயே.

௩௫௬. யேசுவின் சாவாலினமுன்
னிச்சைகட்குச் சாகாம
லாசைகளுக்கே பிழைத்தா
லாரிருளில் வீழ்வாயே.

## ௧௯. மனஸ்தாப முக்கியம்.

௩௫௭. என்னுயிருக்கன்பே
யிராசாவே யும்மை முற்றுஞ்
சன்னை செய்து யூதர்
தமக்களிக்கச் செய்தேனே.

௩௫௮. சின்னப்படுத்தித்
திருமுகத்திலே யுமிந்து
வின்னமுறப்பேசி
மிகத்தூஷணித்தேனே.

௩௫௯ முள்ளின்முடி சூட்டினனே
மூர்க்கத்தறைந்தேனே
வெள்ளமெனக் குருதி
மேவவதைத்தேனே.

௩௬௦. ஆளிற்பயித்தியனென்
றுக்கியடாமையினுற்
றோளிற் சிலுவை
சுமத்திவைக்கச் செய்தேனே.

௫௬௧. கோல்கொடுத்தி ராசனெனக்
கோட்டியெல்லாங் கொண்டேனே
கால்கரத்திலாணி
கடாவியறைந்தேனே.

௫௬௨. ஈதெல்லாம் பாவி
யிடும்பினாலே விளைந்த
தீதெல்லா மிக்கொடுமை
செய்யவே தானதுவே.

௫௬௩. ஐயோவென் பாவத்
தகோரமுமை யிவ்விதமாய்ச்
செய்பாவதைகளெல்லாஞ்
செய்தடிக்கச் செய்ததுவே.

௫௬௪. நீங்காமற் பாவ
நிலையிலே நிற்பதுதான்
பாங்கோவதும்மைப்
பரிகாசஞ் செய்வதல்லோ.

௫௬௫. ஆகாத பாவியென்ற
ஹங்காரத்தாற் புரியு
மாகாமையும்மை
யடிக்கிறதற்கொப்பாமே.

௫௬௬. வாயினானின்னை
வசனித்தும் பத்தியில்லா
மாயமெல்லா நின்னை
வதைக்கிறதற்கே சரியே

௫௬௭. அப்படியானாலு
மனுக்கிரகஞ் செய்யுமென
வெப்படியான் சொல்வே
னெனக்குரைக்க வாயதுண்டோ.

௩௬அ. செய்யுமுமதன்மை யெல்லாஞ்
சிந்தியாதே போனால்
வையகத் திலென்போல்
மகா பாதகனுரோ.

௩௬௯. சித்தமிரங்கி யென்பாற்
செய்த நன்றெலாமறந்து
நித்தியமுந் தீமைசெய்தா
னின்றனக்காளாவேனோ.

௩௭0. அருந்துயரீதெல்லா
மறிந்துமிளகா
இரும்பாய் மனதிருந்தா
லீடேறப்போறேனோ.

௩௭௧. கண்டார் நகைக்கக்
கழுக்குருசினீரிருக்கச்
சண்டாளனுக்குலக
சந்தோடம் வேண்டுவதோ.

௩௭௨. பரதாபத்தோடே நீர்
பாரக்குருசு
மரமீதிருக்கையிலும்
வஞ்சகனெஞ்சஞ் சாதோ.

௩௭௩. சீவன்விட்டு நீரிறந்த
செய்கையைச் சற்றே நினைந்தாற்
பாவியுயர் வாழ்ந்திருக்கப்
பாருலகில் ஞாயமுண்டோ.

௩௭௪. மிக்க பரமசுதன்
மேனியெல்லாங் காயமுற்ற
தக்கிரமக்கார
னறியாமற் போனேனே.

௫௭௫. ஈசனிதையம் பிளந்
திரத்தவெள்ளக்காட்சி கண்டு
மாசுபற்றிக் கெட்டலைந்து
மாபவத்தைச் செய்வேனோ.

௫௭௬. ஆகாத பாவியகத்
தச்சாயிப்பாடுணைறந்தால்
மோகாசை யாவு
முழுதுங் கசப்பாமே.

௫௭௭. பற்றுதலாய்க் கத்தர் திருப்
பாடனைத்துஞ் சிந்தைசெய்தாற்
சிற்றின்ப வாழ்வெனக்குச்
சேரவெறுப்பாமே.

௫௭௮. ஐயோ கடவு
ளருங்கொலையாய்ச் செத்தத்தினல்
மெய்யாயுலக
வெகுமானம் வேண்டேனே.

௫௭௯. குற்றமில்லான் பட்ட
கொடுமையெல்லாஞ் சிந்தைசெய்தாற்
சற்றெனினும் பாவவழி
தன்னினடவேனே.

௫௮௦. காரணனார் பட்ட
கனதுயர் மேற்காதல் வைத்தா
லாரெனசொன்னாலு
மாங்காரங் காட்டேனே.

௫௮௧. தேவன் மடிந்த
திருச்செயலையானினைந்தா
லாவிபோமட்டுமுல
காசைவரமாட்டாதே.

௩௮௨. அத்தன் பொறுத்த குற்ற
மத்தனையும் யானறிந்தால்
மெத்தனவையல்லாமல்
மேட்டிமையைக் காட்டேனே.

## ௨0- மன்றாட்டு.

௩௮௩. பாடான விப்பெரிய
பாட்டிலென்றன் பங்கருளக்
கூடாதுபோவெனவே
கோபித்துச் சொல்வீரோ.

௩௮௪. அலகையடியானென்னையே
யன்புமகவாக்கி
வலிய பிசாசாள
மறுத்துங் கொடுப்பீரோ.

௩௮௫. தேவரீர் பட்ட
சிலுவையின் வாதைகட்குப்
பூவுலகிற் பாதகன்செய்
பொல்லாங்கோ ரீடாமோ.

௩௮௬. அட்டதிக்கோர் பாவ
மனைத்துஞ் சகித்தருளு
மட்டிலானின் பொறைக்கென்
வஞ்சமலையாமோ.

௩௮௭. அன்பாகக் கைநீட்டி
யாவரையுங் கூவினபின்
என்பாவத்தைப் பெரிதா
யெண்ணியென்னைத் தள்வீரோ.

௩௮௮. எத்தனையோ வத்தனைபே
றென்றுமுமக்கேவல் செய்யச்
சத்துருவாய் நான்போகச்
சம்மதியங் குண்டாமோ.

௫௮௯. கோணாமலென்னையாட்
கொள்ளநீர் வந்துமற்பன்
வீணாய நரகில்
விழப்பார்த்திருப்பீரோ.

௫௯0. கிட்டவரும் பாவியென்னைக்
கிட்டாமற்றள்ளி விடப்
பட்டுருவ ஆணிதைத்த
பஙகயத்தாற் கூடாதே.

௫௯௧. பத்தியினாலும்மைப்
பணையிலறைந்தென் முனமே
வைத்திருந்தாலென்னை விட்டு
மாறிநீர் போவதெங்கே.

௫௯௨. எங்கோனுதிர்த்த
இரத்தமெல்லாம் பாவிகட்கே
பங்கானதல்லோவென்
பங்குதரவொண்ணாதோ.

௫௯௩. அக்கிரமக்கார
னகந்தைதனைப் பாராமற்
பக்கிஷமாய் நீரடைந்த
பாடதெல்லாம் பார்த்தருளும்.

௫௯௪. கொன்றவரைக் காக்கக்
குருசினில் மன்றாடியதோர்
நன்றெனக்கெந்நாளும்
நயந்துசெய்யுங் கர்த்தாவே.

௫௯௫. உருகிவலப்பாகத்
துமைநோக்கி நின்ற
திருடனைப் பார்த்த கண்ணாற்
றீபாவியைப் பாரும்.

நகசு. பொங்கித் தரையிற்
பொழிந்த திருவுதிரத்
திங்கெனுளதோர் துளிய
தென்னுந் தெளித்தருளும்.

## உக. செபம்.

நகஎ. வேதாவே நின்சுதனை
வேண்டியெனை நோக்கித்
தீதானயாவினையுந்
தீர்த்தெனை யாட்கொண்டருளும்.

நகஅ பாடுபட்ட கத்தர் திருப்
பாடதெல்லாம் பார்த்திரங்கிக்
கேடுகெட்டவென் மேற்
கிருபைசெய்யுமாண்டவனே.

நகக. பாதுகாத்துன்றன்
பரிசுத்த மைந்தனுட
நீதியினலென்னை முற்றும்
நீதிமானுக்கிவிடும்.

சா. பரிசுத்த ரூபிப்
பரனே நின்னன்பை
வரிசித்தென் கன்மனதை
மாற்றியெனைச் சீர்ப்படுத்தும்.

சாக. காந்திமிகுமக்கினியின்
கண்ணன விஸ்பிரீத்துச்
சாந்துவே யென்னுளத்திற்
றங்கியெனக்கன்பு செய்யும்.

சாஉ. திரியேக வஸ்துவெனுந்
தேவபொருளே யென்
னறியாமை நீங்க
வனுக்கிரகஞ் செய்தருளும்.

௬௩. மோசப்படுத்திவரு
மூர்க்கப் பிசாசையெல்லா
மேசுவே கோபித்
தெனைவிலகச் சொல்வீரே.

௬௪. என்ன சீருண்டா
மிதையந் திரும்பாட்டா
லன்னதற்கு நீரே
யருள்புரியுமற்புதனே.

௬௫. வெள்ளமெனத் தெய்வீக
மானதுயர் மேவி
உள்ளமனைத்து
முருகுதற்குச் செய்வீரே

௬௬. அண்ணலுமக்கேரு
தனைத்தையும் விட்டோடி
யெண்ணம் வைத்தும்மோடயிக்க
மாயிருக்கச் செய்வீரே.

௬௭. எல்லா லௌகீக
பிச்சைகட் கெல்லாமாண்டு
நல்லாளாயுன்றனக்குள்
நானிலைக்கச் செய்வீரே.

௬௮. என் விசுவாசத்தை
யெடுக்கப் போர்செய்து வருந்
துன்மனசை வெல்லத்
துணைநீர்தான் கத்தாவே.

௬௯. மீட்பரே யென்றன்
விசுவாசத்தைத் திடத்தித்
தீட்படருமாயை யென்னைச்
சேராமற் காத்தருளே

௬கய. பாங்குபெற நித்தியமும்
பத்தியினிற் சூடாகி
யோங்கி வளர
வுமதுதவி செய்வீரே.

௬கக. கெட்ட இச்சையாவுமெனைக்
கிட்டாமலே முறியக்
கட்டளை செய்யுங்
கருணை மனுவேலே.

## உஉ பத்தி.

௬கஉ. இத்தகமையாக
இரங்கிப் புலம்பி நின்று
வித்தகனராலயத்தில்
மேவிவந்த கும்பினுடன்.

௬கந. திரும்பியெனையாண்ட
தேவன் மரணத்
தருந்துயரங் கொண்டதெல்லா
மாற்ற முடியாதே.

௬கச. எந்தை விலாவி
னிருகால் கரத்திலுற்ற
வைந்து வடுவென்ற
னகத்திற்றழும்பாமே.

௬கரு. கார்த்த கொலைஞர்
கடவுடிருச் சிரத்திற்
சேர்த்தமுடி முள்ளெனது
சிந்தைதனிற்றைத்திடுமே.

௬கசு. ஆண்ட வெனதைய
னருங்கால் கரந்துளைத்த
நீண்ட விருப்பாணி யென்ற
னெஞ்சைத் துளைத்திடுமே.

சகஎ. சிலமனுவேலின்
றிருவிலாவைத் திறந்த
வேலின்முனை யென்னுளத்தை
மேவி யுறப்பாய்ந்திடுமே.

சகஅ. அந்நாளிலணை
லடைந்த துயரத்தனையு
மிந்நாளெனின் மனதுக்
கெண்ணிலா வாதையதே.

## உரு. மனஸ்தாபயோசனை.

சகக. இச்சணமோ வல்லதுதா
னின்னமொரு நாழிகைக்கோ
யெச்சமயஞ் சாவுவரு
மென்றறிய மாட்டேனே.

சஉ0. ஆங்காலமெல்லா
மதன்மத்திலே நடந்து
போங்காலமாராலாம்
புண்ணியத்தைச் செய்வதற்கே.

சஉக. சுகத்தோடிருக்கச்
சுகிர்த வழிசெல்லார்
மிகத்தான் வியாதியுற்ற
வேளைதனிற் செல்வாரோ.

சஉஉ. இளவயதினன்மை செய்யா
தீனனுயிர்போம் போ
துளமகிழும் ஞானத்
துறுதியெனக்குண்டாமோ.

சஉரு. வாராப்பிணியு
மருந்தும் வயித்தியனும்
நேராகச் சூழுமந்த
நேரமறஞ் செய்வேனே.

சஉச. ஒப்பாரி சொல்லி
யுறவின் முறையார் புலம்பு
மப்போ தவம்புரிய
ஆர்க்குமன தாகும்.

சஉரு. பெண்டிரும் பிள்ளைகளும்
பெற்றவருஞ் சுற்றியழக்
கண்டாற்றிடனுய்க்
கதிவழியிற் சேர்வதெங்கே.

சஉசா. இனியினி யென்றெண்ணி
யிருக்கையிலே சாவு
நினையாதுற்றார் பிறகோர்
நேரம்வா வென்பேனோ.

சஉஎ. இருளோ பகலோ
எதிலோ இறைவன்
திருடனைப்போல் வந்தாலென்
செய்கைக்கென் சொல்வேனன்.

சஉஅ. ஆற்றும மொன்றே
யதையுமிழந்தக்கால்
வேற்றுமொரு வஸ்துவினுல்
மீட்கமுடியாதே.

சஉகூ. இன்னபல ஞானமெல்லா
மெண்ணியெண்ணிக் கற்றாலும்
பின்னுமுனக்கென் மனமே
பேரின்பம் வேம்பாமே.

## உச. பிரதிக்கினை.

சநுO. எறிந்துவிடு மாங்கிஷத்தி
னிச்சையழிவாமென்
றறிந்தாயினியா
கிலும்பவத்தைச் செய்யாதே.

சஙக. பார்க்கு முலகப்
பவிசதெல்லாம் பாழ்மனமே
நீர்க்குமிளி போலாம்
நினைவை யதில் வையாதே.

சஙஉ. ஆடம்பரங்க
ளலகையினாராதனைகள்
கேடென்று தள்ளிக்
கிறிஸ்துவைப் பின்செல்வாயே.

சஙங. வானத்தின் கீழனைத்து
மாயையென்று கண்டாயே
ஞானத்தான் றனுமதை
நாட்டிவைத்துப்போனானே.

சஙச. என்னவந்தாலு
மினியுமக்கேறாத தொன்று
மென்னையழுக் காக்கா
திருப்பேன் மனுவேலே.

சஙரு. தேவனே யும்மைச்
சிநேகிப்பேனல்லா தென்
சீவனிலெல்லாம் பவத்தைச்
செய்யத் துணியேனே.

சஙசு. பொல்லாக் குணத்தை முற்றும்
போக்கியென்றன் சீவனையு
மெல்லாத்தையும் பார்க்க
யேசுவை நேசிப்பேனே.

## உரு. நம்பிக்கை.

சஙஎ. சொற்ப வுலகச்
சுகத்தையற வெறுத்தாற்
றற்பரனைக் கண்ணாரத்
தான்கண்டு வாழ்வேனே.

சஙஅ. இருதய சுத்தத்தோ
டிருந்தாற் பரத்திற்
சருவேசுரனை யென்றுஞ்
சார்ந்து தெரிசிப்பேனே.

சஙகூ. பாவமெல்லாம் நீங்கிப்
பரிசுத்தமாய் நடந்தாற்
சீவனுடன் மோட்சதலஞ்
சேர்ந்து களிகூர்வேனே.

சச0. தவசுநிலையிற்
றவறுதிருந்தாற்
கவலையில்லா தூழியுள்ள
காலமெல்லாம் வாழ்வேனே.

சசக. ஆணுவத்தைத் தள்ளி
யநித்தியத்தைக்கை நிகழ்ந்தாற்
சேணுலக ராச்சியத்திற்
சென்று களிகூர்வேனே.

சசஉ. தானென்ற வெண்ணஞ்
சரிவரச் சாகுங்காலம்
நானென்றுஞ் சாகாம
னன்றுயிருப்பேனே.

சசஙு. காமாவிகாரக்
கனங்குழலாராசை யற்றாற்
சீமானி யேசு
திருமுகத்தைக் காண்பேனே.

சசச. ஒன்றுயெழும்பு
முடல்மூன்று சத்துருவை
வென்றாற் கிறிஸ்துவுடன்
மேவியரசாள்வேனே.

௪௪௫. வேதநெறிப்படியே
மெஞ்ஞானியாய் நடந்தார்
றூதர்சபை திரண்ட
சொற்கத்திருப்பேனே.

௪௪௬. தற்பரனுக்கேற்கத்
தருமவழி நடந்தாற்
பொற்புறும் வானோர்களுடன்
போயிருந்து கொள்வேனே.

௪௪௭. மேவுமுடலை
வெறுத்துத் தவம்புரிந்தாற்
சீவமரக் கனியைத்
தின்று சுகிப்பேனே.

௪௪௮. அறியாமை நீங்கி
யகம்பிரமை யற்றாற்
சிறியேன் பராபரனைச்
சேவித்திருப்பேனே.

௪௪௯. எல்லாத்திலும் பார்க்க
யேசுவை நேசித்திருந்தா
லுல்லாசமாயுன்
னதத்திலுயர்வேனே.

௪௫௦. என்னைச் சினேகித்
திருப்பதுபோலென்னயலான்
றன்னைச் சினேகித்தாற்
சம்மனசாய்ப் போவேனே.

௪௫௧. உத்தம பத்திவிசு
வாசமதிலோங்கி
மெத்தவும் நம்பிக்கை
விளங்கவைத்தாய் மெய்ப்பொருளே.

சஙூ௨. பவித்திரஞ் செய்தென்னைப்
பரிசுத்தமாக்கிக்
குவித்தென்னகத்தைக்
குணத்தில் வைத்தார் சுகமே.

## உகூ. காதலன் புகழ்ச்சி

சஙூ௩. ஒன்றான வேதத்தி
னுட்பொருளை யுன்னதத்திற்
சென்றாளுமேக
திரித்துவத்தைப் போற்றிசெய்வாம்.

சஙூ௪. வேதமுதலை
வினையறுத்த வித்தகனை
மாதவனை ஞான
மணவாளனைப் பணிவாம்.

சஙூ௫. புண்ணியனை மாளாத
பொக்கிஷத்தைப் பக்கிஷத்தை
விண்ணவனை மேலவனை
மேசியாவைத் தொழுவாம்.

சஙூ௬. பூரணனை மெய்வேத
போதனைப் புராதனனைக்
காரணனை யூதர்குலக்
காவலனைக் கைதொழுவாம்.

சஙூ௭. சுத்த சுவிசேட
துரந்தரனைத் தூயவனை
முத்திவழி காட்டவந்த
முப்பொருளைப் போற்றிசெய்வாம்.

சஙூ௮. நின்றநிலை கெட்டவனை
நீதிவழியிற் சேர்த்தே
யன்றுமுதனன்று செய்த
வாண்டவனைப் புகழ்வாம்.

சஙுகூ. உருக்கத் தயவா
யுயர்ந்தோனை யுண்மைப்
பெருக்கத்தானந்தானைப்
பேணி நமஸ்கரிப்பாம்.

சஙுo. என்றனுயிர்க்காக
விரங்கித் தனதுயிரைத்
தந்தை தனக்குப் பெலியாய்த்
தந்தானைச் சிந்தைசெய்வாம்.

சஙுக. செங்குருதி பானமதாய்ச்
செய்யவுடற் போசனமாய்ப்
பங்கமறத் தந்தெனைக் கண்
பார்த்தானைத் தோத்திரிப்பாம்

சஙுஉ. முந்தினனைப் பிந்தினனை
முன்னானைப் பின்னானை
வந்தனையுவந்தானை
வந்தானை வாழ்த்தல்செய்வாம்

சஙுங. சமஸ்த வரப்பிரசா
தத்தாவியானை
நமஸ்கரித் தென்னாளுமிந்த
நானிலத்தில் வாழ்ந்திருப்போம்.

சஙுச. மங்களமனாதியர்க்கு
மைந்தனுக்குமா வியாக்குந்
தங்குமனந்த
சதாகாலம் வந்தனமே.

## உஎ. திருச்சபை வாழி.

சஙுரு. வாழி கிறிஸ்தோரவையு
மாறாத சத்தியமுஞ்
சூழுமறையோர்
சுகிர்த நெறியே வாழி.

௪௬௬. காரணதபோதனர்கள்
கற்றுணர்ந்த சாஸ்திரிக
ளாரண புராண
வறிஞர்களெலாம் வாழி.

௪௬௭. ஞாயத்துரைகள்
நடத்திய செங்கோல் வேந்தர்
தேயத்ததிகாரஞ்
செய் நீதியோர் வாழி.

௪௬௮. நற்றரும வான்களுடன்
ஞாயவுபதேசியர்கள்
கற்றகலைக்கியானக்
கவிஞர்களெலாம் வாழி.

௪௬௯. வரத்தர் தவத்தர்
மயக்கறுத்தமாக்கள்
விரத்தத்துவத்தர் முத்தர்
வித்தியாதரர் வாழி.

௪௭௦. செய்ய சபையிற்
செழிக்கும் விசுவாசிகடா
ளையமற்றெந்நாளு
மம்புவியிலே வாழி.

௪௭௧. சந்ததிகள் வாழ்ந்து
சகல சுபசோபனமாய்ச்
சிந்தை மகிழ்ந்தோங்கிச்
சிறந்திருக்கவே வாழி.

௪௭௨. ஆற்றும சரீர சுக
வாரோக்கியத்துடனே
மாற்றமிலாதென்று
மகிழ்ந்திருக்க வாழியதே.

## உஅ. பேரின்பக் காதலளவு.

௬எ௩. வாட்டமில்லாந் தேவ
சகாயன்மகன் மதுரை
நாட்டினெல்லை வாழ்வேத
நாயகன் பாடலதே.

௬எ௪. பேசுபிறந் தாயிரத்தெண்
ணூற்றுப் பதின்மூன்
றுசதில்லான் காத
லறைந்தவாண் டானதுவே.

௬எ௫. காரணனார் பேரின்பக்
காதலெனும் நூலளவ
தேரிசைந்த நானூற்
றெழுபத்தைங் கண்ணியதே.

முற்றும்.



# பிரலாப ஒப்பாரி.



## காப்பு

திருத்தய வுணரார் செய்த
தீமையாற் பாடுபட்டுத்
தருச்சிலு வையிற்றஞ் சீவன்
றந்துலகத் தைமீட்ட
அருட்கிறிஸ்துவுக் கன்பாய்ப் பிர
லாப வொப்பாரி சொல்லப்
பரத்தினி ஸ்பிரீத்துச் சாந்தெம்
பரிசுத்த ரூபி காப்பாம்.

## க. தேவவணக்கம்.

க. சீராதி கத்தன்
றிருமரணத் தைத்தேர்ந்து
பேராய்ப் புலம்பும்
பிரலாப வொப்பாரி.

உ. தந்தைப் பிதாவே
தயவாகக் கேட்டிரங்கி
மைந்தனுக்காய் வேண்டி
மகிழ்ந்தெனையாட் கொண்டருளே.

ங. தப்பாக் கிறிஸ்து
தயாபரா நின்மீது
ஒப்பாரி சொல்ல
வுவந்தெனுக்கு வாக்கருளே.

௪. நித்திய பிதாவினொரு
நேயகுமார னரர்க்கு
மத்தியஸ்த னேசு
பரித்த புலம்பலுக்கு.

௫. பாவிகளைச் சுத்தாங்கம்
பண்ணுகின்ற மெய்ப்பரிசுத்
தாவியே முன்னின்
றனுக்கிரகஞ் செய்தருளே.

## ௨. அவையடக்கம்.

௬. மூப்பான வேத
முதன்மையோ ரிப்புலம்பல்
தீழ்ப்பான பாடலெனச்
செப்பமனங் கொள்ளாரோ.

௭. எப்பா வலரோனு
மேழைமதி யாற்புலம்பு
மொப்பாரிக் கென்மே
லொரு குறையுஞ் சொல்லாரோ.

## ௩. தசாங்கம்.

௮. சீனு மலையிற்
றிடமெனச் சீயோனீன்ற
மானூர் பொருட்டான்
மடிந்த கொல்க தாமலையான்.

௯. சீவப்பெரு நதிக்குஞ்
செல்வயோர் தானதிக்கு
மாவிப் பெருக்கி
னகண்டகிரு பாநதியான்.

௰. இவ்வுலகின் ராச்சியந் தா
னென்னுதல்ல வென்று சொன்ன
திவ்விய பேரின்பச்
செபல்வான ராச்சியத்தான்.

கக. சாத்தா னடிமைத்
தனத்திலுற்ற பாவிகளுக்
கேற்தான் கையேற் தான்ஞா
னேத்தான சரேத்தான்.

கஉ. ஓசியன்ன ரட்சியுமென்
றோலமிட மாந்தர் குழா
மீசுரத்தோ டேறிவரும்
வேசரியாம் வாரணத்தான்.

கஙு. சீவனுள்ளோர் தங்களுடன்
செத்தோரையு மெழுப்பி
மேவிநடுத் தீர்க்கவரும்
வெள்ளைமே கப்பரியான்.

கசு. சத்துருக்களோடி விழச்
சர்ப்பனைப் பிசாசலற
எத்திசையுமேற் கொண்
டிலங்குசிலு வைக்கொடியான்.

கரு. வானவரு மானிடரும்
வாஞ்சையின லுச்சரிக்குஞ்
சேனைவித மந்திர
தியான செப மாலையினன்.

கசு. வாழ்ந்தோருங் கூடிவர
மாய்ந்தோரொலா மெழும்பச்
சூழ்ந்தே ழெக்காளந்
தொனிக்குந் தனிமுரசான்.

கஎ. பூதலத்தோர் பாதலத்தோர்
பொன்னுலகத் தோரும் வந்து
பாதந்தொழுது
பணிந்துநிற்குஞ் செங்கோலான்.

7A
5-19

## ச. தியானம்.

கஅ. இத்தகமை வல்லபத்தி
யேசுக் கிறிஸ்திறைவன்
சித்தம்வைத்துப் பாடுபட்டுச்
சீவனையும் விட்டிறந்தான்.

கசு. ஆறு தினத்தி
லனைத்தையுஞ் செய்தோனுருவ
மாறிக் கபால
மலையிலுயிர் விட்டிறந்தான்

உ0. நல்குந் திருக்கருணை
நாயகனு ராடுகட்காய்க்
கொல்கதா வெற்பிற்
குருசிலறை யுண்டிறந்தான்.

உக. சிவன் மடிந்து
சிலுவையினிற் றொங்கிறதைப்
பாவிகளாரேனுமுண்டோ
பார்க்க வரமாட்டீரோ.






உஉ. அன்பிற்குரிய
அருமைக் கிறிஸ்தோரே
யென்பிறகே கூடி
யிரங்கி யழமாட்டீரோ.

உங. சொந்தப் பிரானுர்க்குச்
சூழ்ந்ததுய ரத்தனையும்
வந்து கண்ணுற் சாண
மனதிலையோ சீயோனே.

உச. ஆற்றுமநேச
ரரும்பாடு பட்டிறந்தான்
போற்றுஞ்சபையே
புலம்பவர மாட்டீரோ.

உரு. என்னைபோற் பொல்லாதா
ரிங்கிராரிங்கிருந்தா
லுன்னிப்போய்க் கத்தருக்கென்
றொப்பாரி சொல்லீரோ.

உசு. அன்றெருசலேமி
லழுதுசென்ற மாதர்பின்போ
யின்று புலம்ப
எழுந்து வரமாட்டீரோ.

உஎ. மெய்ப்பாஞ் சபையே
விசுவாசக் கண்ணோக்கி
யொப்பாரி சொல்லி
யுறுதுயரங் கொள்ளீரோ.

## ரு. ஒப்பாரி.

பாடுகளின் றொகை.

‡ "என்னையா தயாபரரோ
யென்ற வார்த்தையை அடிதோறுந்
தொடர்ந்துகொள்க."

உஅ. ஆதிபரப்பொருளே †
ஆட்கொண்ட நாயகமே
மாதுவினை தீரவென்றே †
வையகத்தில் வந்தீரோ.

உகூ, வேதம் நிறைவேற்றி
வெற்றி முடிசூட்டப்
பாதகருக்காய் வேண்டிப்
பாடுபட வந்தீரோ.

ஙo. உன்னதத்தின் மெய்வாழ்வே
யொன்றான கத்தாவே
என்னை யிரட்சிக்க
இரக்கமுமக் குண்டாச்சோ.

௩௧. சங்கையின் ராசாவே
தாழ்த்திபண்ணப் பட்டீரோ
பங்கமுற லானீரோ
பாவியைப் போனின்றீரோ.

௩௨. வானத்தின் வேந்தே
மகிமையெல்லாம் விட்டீரோ
ஈனத்தனமா
யிகழ்ச்சியெல்லாம் பட்டீரோ.

௩௩. அன்னைவினை தீர்க்க
அரும்பாடடைந்தீரோ
மன்னவனே பாதகர்க்காய்
வன்கொலைக்கு ளானீரோ.

௩௪. அம்பரமும் வானு
மனந்தவுல கும்படைத்த
எம்பிரானே நீர்தா
னேழையைப் போலானீரோ

௩௫. அண்டமெல்லாந் தந்து
அனைத்தும் படைத்தோனே
கொண்ட இந்தக் கோலங்
கொடுமையல்லோ கத்தாவே.

௩௬. கட்டுண்டு நின்றீரோ
கள்ளனைப்போற் சென்றீரோ
வெட்டுண்கும் பாதகரை
மீட்டுவிட வேண்டினதோ.

௩௭. பண்ணிய நிந்தை
பரிகாச கோரணிக
ளெண்ணி முடியா
இகழ்ச்சியெல்லாம் பட்டீரோ.

௩௮. முக்கா டிட்டாரோ
முகத்தி லறைந்தாரோ
எக்கேடுங் கெட்டோர்க்
கிரங்கமன தானீரோ.

௩௯. மறுதலிக்கப் பட்டீரோ
வன்சிறைக்கு (ளாகி) ளானீரோ
பொறுமையுடன் கேட்டீரோ
பொல்லாதோர் தூஷணத்தை.

௪௦. கற்றூணிற் சேர்த்துக்
கடூரத் தடித்தாரோ
பற்றுதோ இப்பாடு
பாவிகளை மீட்பதற்கு.

௪௧. வாராலடிக்க
மருகிநிற்க லானீரோ
ஆராரை மீட்க
அரிதாகு மப்பாரே.

௪௨. கோர்த்த இருப்புக்
கொடுக்குச் சவுக்கதனு
லார்த்தடிக்கச் சேர்வையெல்லா
மாங்காரங் கொண்டாரோ.

௪௩. சீவவிருட்சக் கனியைத்
தின்றிருக்க மாட்டாமற்
பாவி பறித்த
பழிவந்து நேர்ந்ததுவோ.

௪௪. நீதியில்லான் வீடு
நிறைந்தரத்தக் காடாச்சோ
வேதமில்லான் வீடு
வெந்தோன்றிக் காடாச்சோ.

சடு. ஞாயக் களரி
நனைந்து பெருக்காச்சோ
மாயக் களரி
வழிமுடியச் செந்நீரோ.

சசு. பெருகி ரத்தமோடப்
பிலாத்தின் மனங் (குன் றி) குன்றலையோ
அரண்மனை யாஸ்தான
மதிர்ந்து நடுங்கலையோ.

சஎ. சாலேமின் மாதர்
தயங்கிப் புலம்பலையோ
ஓலோல மோலமென் று
ஒப்பாரி சொல்லலையோ.

சஅ. யேருசலேம் பெண்க
ளிரங்கிப் புலம்பலையோ
மாரிபோற் கண்ணீர்
வழிந்தோடக் காணலேபோ.

சகூ. தாவீதின் வீட்டார்
தனித்துப் புலம்பலையோ
பாவாயுருகிப்
பரதபித்து நிற்கலையோ.

ருO. சீயோன் குமாரி
திடுக்கிட் டலறலையோ
பாயாதோ கண்ணீர்
பரதேசுத் தோட்டமட்டும்.

## ௬. பரிகாச ராசாவினுளுகை.

எஉ. சங்கீதம்.

ருக. வெள்ளையனாச் சட்டையிட்டு
மீண்ட திருமேனியிலே
தெள்ளுஞ் சகலாத்துச்
செஞ்சட்டை யிட்டாரோ.

ருஉ. முள்ளின்முடி சூட்டினரோ
மூர்க்கத் தறைந்தனரோ
வள்ளலெனச்செய்து
மதிமுகத்திற் றுப்பினரோ.

ருரு. பரிகாச ராசனெனப்
பாதகர்செய் (கோலம்) கோலமதை
வரிசையெனக் கொண்டீரோ
வாழ்த்தினதுங் கேட்டீரோ.

ருச. செங்கோல் மூங்கிற்கோலாய்ச்
செங்கைதனிற் கொண்டீரோ
எங்கோனே யூதர்களை
யின்றாளப் போறீரோ.

ருரு தாவீதின் வீட்டார்முன்
சந்தித்துக் காணாரோ
கோவேந்தர் கப்பமிட்டுக்
கும்பிட்டு நிற்காரோ.

ருசு. பன்னிரு பிதாக்கள்
பணிந்துநின்று போற்றாரோ
அன்னிய தேசத்தி
னரசரெதிர் கொள்ளாரோ.

ருஎ. இஸ்ரேவேற் றேசமெங்கு
மெக்காள (மூதி) மூதாரோ
திசைதோறும் வேந்தர்
தெரிசனைக்கு வாராரோ.

ருஅ. மூச்சாஸ் திரிமார்
முடிமன்னர் போற்றாரோ
எச்சாதியுஞ் சேவித்
தேற்றித் தொழுகாரோ.

௫௯. சித்திர பானுள்ளமட்டுஞ்
செங்கோல் செலுத்தீரோ
சுத்த நிலாமட்டுஞ்
சுயாதிபதியாளீரோ.

௬0. வனாந்தரத்தார் வந்து
வணங்கிப் (பணிந்து) பணியாரோ
அநாந்தரமானோரு
மடைக்கலமென் றண்டாரோ.

௬௧. தற்சீசின் ராசாக்கள்
சங்கைசெய்து நிற்காரோ
உச்சிதங்கள் கைகொண்
டுவந்து பணியாரோ.

௬௨ தீவுகளின் மன்னர்
திறைகொண்டு வாராரோ
காவலர்கா ணிக்கையிட்டுக்
கைகட்டி நிற்காரோ.

௬௩. வெகுமானங் கொண்டுவந்து
வேற்றரசர் (போற்றி) போற்றாரோ
தகுமான சங்கைத்
தளபதிகள் வாழ்த்தாரோ.

௬௪. பூமியி னெல்லை யெல்லாம்
பூபதிமேற் கொள்ளாரோ
சாமிக் கிடும்பொன்
சபேயாவின் பொன்னலவோ.

## ௭. சிலுவை நடை.

௬௫. கள்ளன் விடுதலையாய்க்
காராள வங்கிஷத்து
வெள்ளன் கொலையாக
வேதன் விதிவசமோ.

சுசு. மூப்பான் றலைவன்
முதன்மையா னெம்மை யன்பாய்ப்
பாப்பான் மடியப்
பரமன் விதிவசமோ.

சுஎ. சுத்திகரிப்போன்
சுயாதிபதி சாலேமின்
சத்திரியன் ருவீது
சாகத் தீர்ப்பானுனே.

சுஅ. உசிதத் தயவா
லுலகை வசமாக்கும்
வசியர் குலப்பெருமான்
வன்கொலைக்குளானுனே.

சுகூ. சாத்திர புராண
சமஸ்த வேதாக்ஷரத்தின்
சூத்திரன் சாகத்
துணிந்துமனங் கொண்டானே.

எ0. செஞ்சோதி நாட்டான்
திருப்பத் தூர்க்கோட்டை கட்டத்
தஞ்சாவூருக்குத்
தனிவழியே போறனே.

எக. குருதிவெள்ள மோடக்
குருசைச் (சுமந்து) சுமந்தீரோ
மருகி மருகி
வழிப்பயணம் போதீரோ.

எஉ. பாரச் சிலுவைதனைப்
பாவிகளுக் கோசரமோ
கோரச் சிலுவைதனைக்
கொண்டுசெல்லக் கூடலையோ.

எங. சீமோன் சீரேனே
திடவானே யும்மை விடக்
கோமான் சுமந்த
குருசெடுக்க வல்லவனோ

எச. உலகத்தைத் தாங்குகின்ற
ஒப்பிலாக் (கத்தா) கத்தாவே
கலகச்சிலுவை
கனத்த சுமையானதுவோ.

எடு. வானத்தை தாங்குகின்ற
மட்டில்லாவல்லவனே
ஈனச்சிலுவை
யெடுத்தேக ஏலலேயோ.

எசு. அண்டமெல்லாந் தாங்கு
மனாதி பரப்பொருளே
கொண்ட குருசெடுக்கக்
கூடலேயோ அப்பாரே.

எஎ. அந்தர சொர்க்க
மகிலமெல்லாந் தந்தோனே
பந்தச்சிலுவை மகா
பாரமோ ஐயாவே.

எஅ. எந்தவூரையா நீ
ரெங்கையிருந்தெங்கு வந்தீர்
சொந்த வூரிலுமக்குத்
துன்பம் வந்து நேர்ந்ததுவோ.

எகூ. சிலுவைசுமந்து(செருக்களத்தைநோக்கி)
செருக்களத்துப் பாதையிலே
மெலிவாய் நடந்து
விரும்பிநீர் போறதெங்கே.

அ0. குருசைச்சுமந்து (கொலைக்களத்தை நோக்கி) கொலைக்களத்துப் பாதையிலே
வரிசைத்துரையே நீர்
மாளுதற்கு போறீரோ.

அக. ஆதாம் புரிந்த
அரும்பாவந் தீர்ப்பதற்கு
நாதாநீர் போறவழி
நானறிய மாட்டேனே.

அஉ. மாதா புரிந்த
மகாபாவந்தீர்ப்பதற்கு
வேதாநீர் போற
விதந்தெரிய மாட்டேனே.

அங. கொல்கதாப் பாதை
கொடுந் தூரமானதுவோ
ஒல்கலையோ நெஞ்ச
முருகாதோ பாவிகட்கு.

அச. மலைப்புறத்துப் பாதை
(வழிதொலையாதோ) வழியுந்தொலையாதோ
கொலைக்களத்துப் பாதையிலே
கோட்டிமெத்த வுண்டாமோ.

அரு. கள்ளருடன் கூடிக்
கபாலமலைக் கேகுதற்கு
மெள்ள நடந்தால்
வெகுதூரம் போவதெப்போ.

அசு. கூனிக் குனிந்து
குருசெடுத்துப் போகையிலே
மானக்குலப் பெண்
மயங்கிவிழ மாட்டாளோ.

அஎ. சீயோன் குமாரியுட
சிந்தை தடுமாறுதோ
ஓயாமற் கண்ணீர் விட்
டொப்பாரி சொல்லாளோ.

அஅ. நெஞ்ச முருகி
நெடுந்துயரம் பூணுளோ
அஞ்சியஞ்சிப் பேதை
யதிர்ந்து நடுங்காதோ.

அகூ. சாலேமின் பெண்கள்
தலைவிரித்துச் செல்லாரோ
மேலான ராசாத்தி
விம்மியழ மாட்டாளோ.

கூ0. எருசலே மாத
ரெதிர்கொண்டு செல்லாரோ
மார்பி லடித்து
மனைக்குத் திரும்பாரோ.

கூக. தாவீதின் புத்திரியின்
சத்தமெங்கும் கேளாதோ.
ஏவாளின் சத்த
மெருசலையி லெட்டாதோ.

கூஉ. சாறுளின் சத்தந்
தனிவழியிற் கேட்பதென்ன
மாறாத துக்க
மனத்துயரங் கொண்டாளோ.

கூங. அம்மாள் ரேபக்கா
ளலறுகிற சத்தமென்ன
எம்மாதி பனுக்
கிடுக்கண்வந்து நேர்ந்ததுவோ.

கூச. லேயாளின் சத்தம்
நெடுந்தூரங் கேட்பதென்ன
ஆயாச மாகி
யருந்துயரம் பூண்டாளோ.

கூரு. ராகேல் புலம்பி
நடுத்தெருவிற் செல்வதென்ன
போகாத் துயரம்
பொருந்தினதோ பொற்கொடிக்கு.

கூசு. கன்னிமரித்தாயார்
கனிந்துருகுஞ் சத்தமென்ன
உன்னி யிதையத்
தொருவாளுருவினதோ.

கூஎ. அன்னை மரியம்மா
ளழுதுருகுஞ் சத்தமென்ன
மன்னு மிருதயத்தில்
வாளுருவிப் பாய்ந்ததுவோ.

கூஅ. வியாகுல மாதா
மிகுதுயரங் (கொண்டாள்) கொண்டதென்ன
தயாபரருக்கேதோ
சதிமரணம் வந்ததுவோ.

## அ. சிலுவை மரணம்.

கூகூ. ஏதன் மலையர்தாமு
மேவாளுஞ் சீவனுறக்
காதல் மலையான்
கபாலமலை வந்தானே.

ஈ. நல்குந்திருக்கருணை
நாதன் கொலையாகக்
கொல்கதாக் கோடு
குறுகி வந்து நின்றதுவோ

ாக. ஆளுந் தயாபத்
தனுதி திருவுளமே
போளங் கலந்த
புளித்த ரசங் கொள்ளலேயோ.

ாஉ. ஆடை களைந்தே
யரும்பாதகர் நடுவே
நீடும் பொருளை
நெடுங்குருசி லேற்றினரோ.

ாா. செய்ய மலர்ப் பதத்துஞ்
செங்கரத்து மாணிகளால்
நைதுருவத் தைக்க
நடுக்கமடைந்தீரோ.

ாச. கள்ளர் நடுவாகக்
காணுடாள வந்த
வள்ளல் சிலுவை
மரத்தேற்றப் பட்டாரோ.

ாரு. ஆரியரு மூப்பர்களு
மவ்வழியிற்செல்வோருஞ்
சோரர்களுஞ் சேவகருந்
தூஷணங்கள் சொன்னுரோ.

ாசா. நாடித் தவித்து
நலிந்த இறையவர்க்குக்
காடி கொடுத்தாரோ
கடற்காளாணு னிரப்பி.

ாஎ. சிலுவை மரத்தேழு
திருவசனஞ் (சொல்லி) சொன்னபின்பு
வலிய பிதாவைக் கூவி
மாய்ந்துயிரை விட்டீரோ.

௱அ. ஆகாத பாவிகளி
னக்கிரமத்தைத் தொலைக்கச்
சாகாத வஸ்து
தமதுயிரை விட்டாரோ.

௱கூ. ஆடுகளுக்காக
அருமையுள்ள நல்மேய்ப்பர்
பாடுமிகப் பட்டுப்
பரிந்துயிரை விட்டாரோ

௱க0. மைந்தரை யுண்டாக்கி
வைத்த தயவுக்காக
எந்தை விலாவைத் துளைக்க
ஈட்டியொன்று வேண்டாமோ.

கௗக. மாயப் பிசாசினுட
வல்லடிக்குத் தப்பவைத்த
ஆயன் விலாத்துளைக்க
ஆலவேல் வேண்டாமோ.

கௗஉ. மண்ணதிராதோ
வானுலகுங் கேளாதோ
விண்ணதிராதோ
மேலுலகங் கேளாதோ.

கௗரு. சூரியன் மங்கித்
துயர மடையாதோ
பாரும் நடுங்கிப்
பருப்பதங்கள் வீழாதோ.

கௗச. குன்று பிளவாதோ
கொல்கதாச் சாயாதோ
சென்ற திருக் கோவிற்
றிரை கிழிய மாட்டாதோ.

கக௫. கேரூபீன் கூட்டங்
கிலேசித்துப் பார்க்காரோ
சேரூபீங் கூட்டங்
திகைத்து நின்று நோக்காரோ.

கக௬. கல்லறை வாசற்
கபாடந் திறவாதோ
வல்லவன் போட்ட
மதிலிடிந்து வீழ்காதோ.

கக௭. அந்தரமும் வானு
மனந்த சராசரமுஞ்
சந்திரனுந் தாரகையுந்
தத்தளித்து நிற்காதோ.

கக௮ வேதனடைந்த
வியாகுலத்தைக் கேட்டவுடன்
பூதியங்கள் வெந்து
புகைந்துருகிப் போகாதோ.

கக௯. வெளிச்ச மிருளாகாதோ
(விண்ணுலகு மங்கி) விண்ணுலகு மங்காதோ
பளிச்சென்ற யேருசலேம்
பட்டணந் தீப்பற்றாதோ.

க௨0. பாதாளமஞ்சிப்
படுசாம்பலாகாதோ
வேதாள மஞ்சி
விழுந்தோடிப் போகாதோ

## ௯. துக்கிப்பு.

சகரி. 12: 10—14.

க௨க. ஆடித்திருவிளையாட்
டத்தனையுஞ் செய்தோனை
வேடிக்கை பார்க்க
மிகுந்த திரள் கூடாதோ.

கஉஉ. தாவீதின் வீட்டார்
தனித்தனி துக்கிக்காரோ.
பாவாணர் வீட்டார்
படிப்படி துக்கிக்காரோ.

கஉந. நாத்தானின் வீட்டார்
நலிந்து புலம்பாரோ
கோத்திரப் பிதாக்களெல்லாங்
கூவி யழுமாட்டாரோ.

கஉச. இலேபித்தர் கூட்ட
மிரங்கு (கண்ணீரோட்டம்) கண்ணீராறோட்டங்
கலாபித்த பேருங்
கனிந்துருக மாட்டாரோ.

கஉரு சீமேயி வங்கிஷமுந்
தேவிமாருந் தனித்து
மாமா ரடித்து
வலுமுழக்கஞ் செய்யாரோ.

கஉசு. குத்தினவர் நோக்கி நின்று
கோவென்றழுகாரோ
எத்திசையும் மண்ணும் விண்ணு
மெங்கும் புலம்பாதோ

கஉஎ. தலேச்சன் குமாரனுக்காய்த்
தாய் (கதறும்போலே) கதறி நிற்பது போல்
மலைத்த பெருமூச்செறிந்து
மாதுயரங் கொள்ளாரோ.

கஉஅ. தேசம் புலம்பாதோ
தீவுகளுங் கத்தாதோ
ஓசை முழங்க வெங்கு
மொப்பாரி சொல்லாரோ.

கஉகூ பத்தினி மாரெல்லாம
பரதபித்து நிற்காரோ
உத்தமிக ளெல்லா
முருகிப் புலம்பாரோ.

கரு௦. காவலன் வேறாய்த் தனித்துக
காதலி வேறாய்த் தனித்துக்
கூவி முழங்குங்
குரலோசை கேட்பதென்ன

கருக. மூவரிலே யோர்தன்
முடியான் முடிந்ததுவோ
பாவலனெல்லைப் பதியான்
பாட்டன் மடிந்ததுவோ

கருஉ. சீலோவின் பெண்கள்
திருநாளின் கொண்டாட்டோ
சாலேமின் பெண்கள்
தவசினுட் கொண்டாட்டோ.

## க௦. உத்தம மனஸ்தாபம்.

கருரு. அன்பே யென்னுதா
அருமைக் கிறிஸ்தரசே
வன்பாய் நீர்சாகவந்த
வல்வினை யே தாண்டவனே.

கருச. ஆராய்த வில்லாத
ஆழக்கிருபா நதியே
பேரா யுமக்குப்
பெருந்துயரஞ் சூழ்ந்ததென்ன.

கருரு. பாவமறியாப்
பரிசுத்த கத்தாவே
தேவரீர்க் கென்னுலித்
தீங்கு வந்து நேர்ந்ததுவோ.

கரு௬. தின்றாக்கனி பறித்தேன்
செங்கரத்தி லாணிதைத்தே
னென்றாக் கனிபறித்தே
னுச்சிதனி லாணிதைத்தேன்.

கரு௭. தீயக்கனி பறித்தேன்
சீர்பாதத் தாணிதைத்தேன்
மாயக்கனி பறித்தேன்
வன் கொலைக் குள்ளாக்கி வைத்தேன்.

கரு௮. நன்றி மறந்தே
னலமிழந்தே னுதனரு
ளொன்று முணரா
துயர் நிலையை விட்டேனே.

கரு௯. நின்ற நிலைமை கெட்டே
னீதிவழியைக் கடந்தே
னென்றைக்கும் வாழ்ந்திருக்கு
மேதனிலக் காணி விட்டேன்.

க௪0. நாலுவர மிழந்தே
னன்மையெல்லாம் போக்கடித்தேன்
சீலமிகுஞ் சிங்காரச்
செல்வ வனமிழந்தேன்.

க௪க. சீவனிழந்தேன்
றிடனிழந்தேன் பொல்லாத
பாவி நரக
பயங்கரத்துக் குள்ளானேன்.

க௪உ. ஏதன் மலையு
மீரிரண்டு மாநதியும்
நாதனுறவும்
நடுத்தோட்ட வாழ்வு மற்றேன்.

கசரு. சாகா நிலைமையற்றேன்
சாதி வலமையற்றேன்
வாகான தேவ
மகிமையற்றேன் சாயலற்றேன்.

கசச. செய்யமலர்க் காவை விட்டேன்.
சீவவிருக்ஷத்தை விட்டேன்.
ஐயனருளை விட்டே
னப்பானுனைதை விடேன்.

கசரு. தோட்டச் சுதந்தரமுஞ்
சுத்தமனச்சாட்சியும் போய்க்
காட்டுமனுதியு மாய்க்
கன்மனதியு மானேன்.

கசசா. தின்ற கனியாலே
தீபாவி யானதல்லா
லன் றமுதற் றேவகோ
பாக்கினைக்கு முள்ளானேன்.

கசஎ. கட்டளை மீறினதாற்
கானகத்திலே துரத்தப்
பட்டவதிப் பட்டுப்
பரதபித்து நின்றேனே.

கசஅ. ஈசனைப்போலாகி
யிருக்க நினைத்ததற்கு
நீசனைப் போலாகி
நிந்தைகளுக் குள்ளானேன்.

கசகூ. நெற்றிவெயர்வை விழ
நித்தியமும் பாடுபட்டுப்
பற்றுந்துயரம்
பலகவலைக்குள்ளானேன்.

கடுo. எண்ணத்தினாலே
யெதிராளியாய்ப் போனேன்
மண்ணுக்கு மண்ணாய்
மகா பாவியானேனே.

கடுக, பாவத்துக் காளாய்ப்
பசாசுக்கடிமை யுமாய்ச்
சாபத்துக் காளாகிச்
சத்துருவுமானேனே.

கடுஉ. கோமானை மாலையிட்டுக்
கொண்டானை வானுலகச்
சீமானை விட்டகன்ற
சீர்கேடி யானேனே

கடுங. கத்தாவை யன்பாகக்
கைப்பிடித்த மெஞ்ஞானப்
பத்தாவைக் கொன்ற
படுநீலி யானேனே.

கடுச. அன்பிற்குரியானை
யாற்றும சினேகிதனை
யென் பிராணநாயகனை
யெண்ணாமற் போனேனே.

கடுரு. பாவலனைத் தாவீது
பாத்திபனைப் பட்சமுள்ள
காவலனைக் கொன்ற
கனபாவி யானேனே.

கடுசு. நன்மார்க்கத் தூடழைத்த
நாயகனை விட்டகன்று
சன்மார்க்க மற்றுத்
தனிமார்க்க மானேனே.

கருஎ. நற்குணமும் நற்பணிவும்
நற்புகழு மில்லாமற்
றுற்குணமே மேலான
துற்சீலி யானேனே.

கருஅ. நிதக்கிருபை செய்தானை
(நெஞ்சகத்தெண்ணும) நெஞ்சகத்தே யெண்ணும
லதக்கிரமங் கொண்டமுழு
வாங்காரி யானேனே.

கருகூ. பற்றுந் துயரமெல்லாம்
பாழ்க்கடித்த வானைட்டுக்
கொற்றவனைக் கொன்ற
கொடு சூரியானேனே.

கசூ0. கற்பனையால் வந்த
கடாட்சக் கணவனுக்குச்
சற்பனையே செய்த
சதிகாரி யானேனே.

## கக. விண்ணப்பம்.

கசூக. ஆண்ட பரப்பொருளே
அக்கிரமத்தைப் பொறுத்து
நீண்ட தயவாயுமக்கு
நேமித்துக் கொள்ளீரோ.

கசூஉ. தந்தை மகனைத்
தடுத்தாண்டு கொண்டதுபோ
லெந்தனையும் நோக்கி
யிரட்சித்துக் கொள்ளீரோ.

கசூங. பாவிகளை மீட்கவந்த
பக்கிஷமே மெய்யான
சீவனே யென் வினையுந்
தீர்த்துவிட வொண்ணுதோ.

கசுச. துன்பேத மெல்லாந்
தொலைத்தெனை யாசீர்வதித்தா
னின்பாதத் தன்பு வைத்து
நித்தியமும் போற்றேனே.

கசுரு. ஆபத்தனைத்து
மகற்றியெனை யாதரித்தால்
மாபத்தியாலுன்
மலர்ப்பதத்தைப் போற்றேனே.

கசுசு. பாருந் திருக்கண்ணாற்
பார்த்தெனது பாவமெல்லாந
தீருமனுக்கிரகஞ்
செய்யு மேசையாவே.

கசுஎ. கைதூக்கிப் பாவியெனைக்
காத்திரட்சித் தாண்டருளுந்
துய்யாவுமக்கனந்த
தோத்திர சங்கீர்த்தனமே.

கசுஅ. தஞ்சை முதலான
சகல திருச்சபையும்
எஞ்சலிலா தேசுவுக்கு
னென்னாளும் வாழியதே.

## கஉ பிரலாப ஒப்பாரி.

அளவு.

கசுகூ. தேவசகாயன் சேயன்
செய்ய திருநெல்வேலி
நாவலருஞ் சொல்வேத
நாயகன் பாடலதே.

கஎ0. முன்னவனு ராயிரத்தெண்
ணூற்றுமுப் பானுலாண்டிற்

சொன்ன பிரலாபத்
துயரமிகு மொப்பாரி.

கஎக. ஓதும் பிரலாப
வொப்பாரி யாண்டகைமே
னூதனமாய்ச் சொன்ன கண்ணி
நூற்றெழுபத் தொன்றுமே.




**கவனிப்பு.** இஃது ஒப்பாரி ஒழுங்காய்ப் பாடப்பட்டது. காதலாய்ப் பாடவிரும்பினோருக்கு நிரையசைகளான கசூ-பாட்டிற்றளை தட்டும். அவைகளை இருபிறைக்குள் எழுதியிருக்கிறபடி பாடிக்கொள்க.



கிறிஸ்து எல்லாரிலும் எல்லாமாயிருக்கிற

திருஷ்டாந்தம்.

---

கொலோ 3: 11.

# பிரலாப ஒப்பாரி.

## எ. சிலுவை நடை.

சூடு—சூசூ மட்டும்.

பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்ற நான்கு சாதி
யையுங் கிறிஸ்துவுக்கு உவமானமாகக் காட்டியது

சூடு. கள்ளன் விடுதலையாய்க்
காராள வங்கிஷத்து
வெள்ளன் கொலையாக
வேதன் விதிவசமோ. எ-து.

இந்நூற் சொன்னேன் வெள்ளாளனென்ற காராள வங்கிஷமானதால் தன் சாதியைக் கிறிஸ்துவுக்கு முன்னர் ஸ்தாபித்தான்.

வெள்ளன், கவடற்றவன், சுத்தன்; கள்ளன், கவடனென்றதுபோல ஆளன், ஆளுகிறவன். இப்பதவுரையின்படி வெள்ளாளன் பரிசுத்தமாய் ஆளுகிறவன் இவன் காராள வங்கிஷமென்றழைக்கப்படுகிறான்.

காராளன்-கார்=மேகம், ஆளன்=ஆளுகிறவன் மேகத்தை ஆளுகிறவன். இவ்வாறே கிறிஸ்துவுங் காராளனாகிய வெள்ளாளனென்று காட்டிற்று.

௧. காராளன் மேகத்தை ஆளுகிறவன்.

உ—ம்.

மேகத்தூணிலிருந்தார். 2 மோ. 14: 19, 24.

மேகத்தின் நடுவிலிருந்தார். 2 மோ. 24: 16.

மேகத்தில் எறிப்போனர். அப். 1: 1.

மேகத்தின்மேல் வருவார். மத். 26: 64.

௨. காராள வங்கிஷம். பிதா எப்படியோ அப்படிக் குமாரன். குமாரன் எப்படியோ அப்படிப் பிதா. 2 மோசே 40: 34. மத். 17: 5.

௩. வெள்ளன். வெள்ளாளன்; கிறிஸ்து வெள்ள னென்கிறதற்கத்தாட்சியாக ஏரோதே அவருக்கு வெள்ளை வஸ்திரந்தரிப்பித்தான். லூக். 23: 11. வெள்ளன்-பரிசுத்தன். ஏசா, 6: 3. 4: 8.

அப்பால் பிரம, க்ஷத்திரிய வைசிய, சூத்திரரென்ற சாதி வகுப்பின்படி போவோம்,

## ௧. பிரம.

௬௩. மூப்பான் றலைவன்
முதன்மையா னெம்மை யன்பாய்ப்
பார்ப்பான் மடிய
பரமன் விதிவசமோ. எ-து.

பிரம-பிராமணன் அல்லது பார்ப்பான். இதின் மூன் தின அர்த்தம்.

௧. பிரமன் வேதமுடையவனென்றதுபோல் கிறிஸ்துவும் வேதன்; வேதநாதன், வேதநாயக னென்றழைக்கப்படுகிறார். உ—ம்.

வேதங்கொடுத்தவர். 2 மோ. 20. அதி.

சுவிசேஷங் கொடுத்தவர், போதி வித்தவர். மத், 4: 17. மாற். 16: 15; 16.

உ. பாப்பான் மூப்பும், குருவும், ஆசாரியனுமாயிரு. கிறதுபோல கிறிஸ்துவுமிருக்கிறார். மத். 23: 10. யோவாக் 13. 13, 14. எபி. 7: 17.

பிரம-பாப்பான் அல்லது பார்ப்பான். இதினிரண்டாம் அர்த்தம்.

ந. பார்ப்பான்-பார்க்கிறவன். உ—ம் இஸ்ருவேலை அல்லது நம்மை இரத்தத்திற் கிடந்ததையும் ஆப்பால் நிருவாணமும் அம்மணமுமாயிருந்ததையும் பார்த்தவன். எசே. 16: 6—8

பெத்லசேங் குறவஞ்சி.

பார்க்கு தந்தாலேயேயென்ற தரு 1, 5, 6, 8, 10 பாட்டுக் காண்க.

## உ. க்ஷத்திரியன்.

சுஎ. சுத்திகரிப்போன்
சுயாதிபதி சாலேமின்
சத்திரியன் ருவீது
சாகத் தீர்ப்பானே. எ-து.

க்ஷத்திரியன்-அரசன், வாளுடையவன், சுத்திகரிக்கிறவன், அறுக்கிறவன்.

கிறிஸ்து சாலேமின் ராசாவாகிய தாவீதுச் சத்திரியனுயிருக்கிறார். இவர் சுத்திகரிக்கிறார். அவருக்கு வாள் அல்லது பட்டையமுண்டு அறி. 1: 16. அவர் சாதிகளை வெட்டிச் சங்கரிக்கிறார். வெளி. 19: 15 அவர் சாதிகளை இருப்புக்கோலால் ஆளுகிறார். சங் 2: 9. அவருக்கு வில்லுமுண்டு. வெளி. 6: 2.

## ந. வைசியன்.

சுஅ. உசிதத் துயவா
லுலகை வசமாக்கும்

வசியர் குலப்பெருமான்
வன்கொலைக் குளானுனே. எ-து.

வைசியனே வெள்ளாளன். இவன் பூவைசியன், தனவைசியன், கோவைசியனென்ற மூன்று வகுப்பானவன்.

க. பூவைசியன், பூமியை உழுது பயிரிட்டு வசியப்படுத்துகின்றவன் அல்லது வளப்படுத்துகிறவன்.

கிறிஸ்து பூவைசியனுபிருக்கிறார். மத். 13: 3-8. எசா. 5: 1-4. எசா. 27: 2, 3. மத் 21: 33. மத். 20: 1-6.

உ. தனவைசியன்-செட்டி, வியாபாரம் பண்ணுகிறவன். தனத்தைக் காத்து வளப்படுத்துகிறவன்.

கிறிஸ்து தனவைசியனுபிருக்கிறார். மத் 25: 15-30. லூக். 19: 12-26. லூக். 7: 41-43. மத் 18: 24-27. வெளி 3: 18.

செட்டியாருக்குத் தராசிருக்கிறதுபோல கிறிஸ்துவுக்குந் தராசிருக்கிறது. தானி 5: 27.

ங. கோவைசியன் ஆயன், இடையன், மேய்ப்பன், பசுக்காத்து வளப்படுத்துகிறவன் அல்லது மந்தை மேய்க்கிறவன். ஆட்டுமந்தை மேய்க்கிறவனுக்கு அதிகச்சிறப்பு. இடைக்காட்டார் பாடலைக்காண்க.

கிறிஸ்து மேய்ப்பனுயிருக்கிறார். எசா. 40: 11. சங் 23: 1. எசே. 34: 23. யோவா. 10: 11.

## ச. சூத்திரன்.

சுக. சாத்திர புராண
சமஸ்த வேதாக்ஷரத்தின்
சூத்திரன் சாகத்
துணிந்துமனங் கொண்டானே. எ-து.

சூத்திரன் பலவிதச் சூத்திரங்களையுந் தொழில்களையுமுடையவன். பலவிதச் சாதி வகுப்பானவன்.

கிறிஸ்து சூத்திரனும் பலவிதத் தொழிலாளியுமாயிருக்கிறார்.

சூத்திரரென்ற தொழிலாளிகளில் மூந்தினவன் தச்சன். மத். 13: 55.

ஞானத் தச்சனுடகத்தில் வீடுகட்டினனேயென்ற தருவைக்காண்க.

உ. கொல்லன். எசா. 54: 16. கொல்லனுக்குச் சம்மட்டியுண்டு. எரே. 23: 29.

ந. தட்டான். மல்கி. 3: 3:

ச. கன்னான். எசா. 1: 25.

ரு. சற்றச்சன் 2 மோ. 32: 16.

ஞானத்தச்சனுடகத்தில் கற்பலகை செய்தேனேயாவென்ற தருவைக் காண்க. ஈங்குபஞ்சாளத்தாரைவர் வகுப்பும் ஒருமிக்க வந்தது கண்டுகொள்க.

அப்பால் பலவிதச் சாதிகள் வகுப்பின்படி.

க. வீடுகட்டுகிற கொல்லத்துக்காரன் அல்லது கொத்தன். எசா. 54: 11, 11. யோவா 14: 2, 3.

உ. குயவன். எசா 94: 8. எரே. 18: 2—6.

ந. குருவிக்காரன். மற்றது 1 மோ. 2: 19, 20.

ச. வண்ணான். மல்கி 3: 2. எசா. 1: 18.

உதாரணம் முன்னோர் பாடல்.

நல்லருணை நாதர் நமைவருத்த நெஞ்சமே
கொல்லவல்லப் பொல்லாக்குணம்போக்கமெல்ல
மழுக்குவான் கூறைதனை மாறுபடவண்ணா
னழுக்கு வாங்கற்கென்றறி.

ரு. சவரகன். எசா. 7: 20.

சூ. வைத்தியன் 2 மோ. 15: 26.

எ. செம்மான். 1 மோ. 3: 21.

அ. நிசவுகாரன். 2 மோ. 25: 40. 26: 30. எபி 8: 5.
கூ. சவளிக்காரன். சீலை விற்கிறவன். வெளி. 3: 18.
கம. சயம்பாகி. யோவா. 21: 9. சயம்பாகிக்கு அடுப்புண்டு. ஏசா. 31: 9.

கக. பந்திவிசாரிப்புக்காரன். லூக். 12: 37

கஉ. திராட்சப்பழ ரசமும் பாலும் விற்கிறவன். ஏசா. 55: 1.

கங. தண்ணீர்ப் பந்தல்க்காரன். வெளி 22: 17.

கச. கள்ளன் வெளி. 3: 3.

கரு. செப்படி வித்தைக்காரன்.

அவன் தொழிலாவது.

க. பாம்பாட்டுகிறது. 2. மோ. 4: 2—4. 2 மோ. 7: 9—12. 4 மோ. 31: 6—9.

வெண்கலச் சற்பம். 20-பாட்டுமுதல் 24-மட்டுங் காண்க.

உ. சலஸ்தம்பனம் அலைகளின் மேனடக்கிறது. யோபு 9: 8. மத். 14: 25.

ங. கண்கட்டி வித்தை. லூக். 4: 29, 31. லூக். 24: 31.
ச. வினோதம் கதவடைத்திருக்கையிலுள்ளாக நடுவே வந்து நிற்கிறது. யோவா 20: 19—26.

கசு. வாத்தியக்காரன். யோபு 38: 7—31. 35: 10.

கஎ. துடைப்பத்தாற் பெருக்குகிறவர். ஏசா. 14:22,23.

கஅ. உடைக்கிறவர். ஏசா. 30: 14.

ககூ. அறுக்கிறவன, பள்ளன். வெளி. 14: 15.

உம. வெட்டியான், வழியன். யோவா. 14: 6.

அவனுக்குத் தூற்றுக்கூடையுண்டு, மத். 3: 12

அவன் வீட்டிலே கன்றுக்குட்டி அடிக்கிற வழக்கம். லூக் 15: 23.

அவன் ஞெழில் சவஅடக்கம்பண்ணுகிறது. 5 மோ. 34: 5, 6.

உக. ஐரோப்பிய ரெல்லாம் வெள்ளை மனுஷரென்று பெயர். கிறிஸ்துவும் வெள்ளையுஞ் சிவப்புமாயிருக்கிறார். உன். 5: 10.

உஉ. ஈந்தியரெல்லாங் கறுத்த மனுஷரென்றழைக்கப் படுகிறார்கள். கிறிஸ்துவும் பாடுபட்டதினாலே கன்னிக் கறுத்துப்போனார். உன். 5: 14.

உங. காப்பிரிகளுக்கு இச்சிக்கத்தக்க ரூபமில்லை. அவ் வாறே கிறிஸ்துவுமானார். ஏசா. 53: 2.

மற்றும் இப்படிக் காண்க.

இதினாலே கிறிஸ்து எல்லாச் சாதிகளுக்கும் பொது வாய் மனுடவதாரம்பண்ணி எல்லாருக்கும் எல்லாமானா ரென்பது சத்தியந்தானே.

